శ్రీరస్తు.

శ్రీకనకవల్లీసమేతాయ శ్రీవీరరాఘవపరబ్రహ్మణేనమః
శ్రీమార్కండేయపురాణ క్షేత్రకాణ్డాన్తర్గతమ్
ద్రావిడవ్యాఖ్యాసహితమ్

# శ్రీవీక్షారణ్యమాహాత్మ్యమ్

ஸ்ரீமார்க்கண்டேய புராணத்தில் க்ஷேத்திரகாண்டத்தில்
அடங்கியதும் சதுர்விதபுருஷார்த்தங்களையும்
தருவதுமான

# திருவெவ்வுளூர்மாஹாத்மியம்.

இஃது
சங்கபுரம் திருமலைதாததேசிகன் திருவம்சத்தில்
ஜனித்தவரான

ஈ·ஹை - வரதாசாரியரால்
கீர்வாணபாஷையிலிருந்து தமிழில் வசனரூபமாக
எழுதப்பட்டு
புராணசுலோகங்கள் ஸ்ரீவீரராகவன்
விஷயங்களான பிரபந்தம், அதின்வியாக்கியானம்,
ஸ்தோத்திரம், அஷ்டோத்தரசதநாமாவலி
இவைகளுடன்

சென்னை
வர்த்தமானதரங்கிணீ முத்ராக்ஷரசாலையில்
அச்சிடப்பட்டது.
நந்தன ௵ - தனுர்மீ.
1893.

# விளம்பரம்

இந்தக்கிரந்தம் 1847-வதுவருஷத்திய20வது சட்டத்தின்படி ரிஜிஸ்டர் செய்யப்பட்டிருப்பதாலிதை இதரார் அச்சிடக்கூடாது.இதின்கிரையம் ரூ 0-12 0-தபால்சார்ஜி பிரதி1-க்கு-0 1-0- வேண்டியவர்கள்சென்னைபட்டணம் வண்ணாரபேட்டை ஹைரோட்டில் சோராஞ்சேரிமிடாஜமீன்தார்.வ ஸோ-கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் பங்களாவில திருமலை - சங்கபுரம். ஈதைவரதாசாரியரிடத்தில் பெற்றுக்கொள்ளலாம் இதுதெலுங்கிலும. அச்சிடப்பட்டிருக்கிறது.

# ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

## அவதாரிகை

ஸ்ரீய:பதியாய், அவாப்தஸமஸ்தகாமனாய், ஜ்ஞாநாநந்தஸ்வரூபனாய், அநந்தகல்யாணகுணபரிபூர்ணனாய். சுத்தஸத்வமயமான திவ்யமங்களவிக்கிரஹத்தையுடையவனான ஸ்ரீமந்நாராயணன் ஸ்ரீவைகுண்டதிவ்யநகரத்தில் திருமாமணிமண்டபத்தில் திருவனந்தாழ்வானாகிற திவ்யஸிம்ஹாஸநத்தில் அயர்வறுமமரர்கள் தொழுதேத்தும்படி திருமகள்மண்மகள் நீளைமுதலான தேவிமார்களுடன் வீற்றிருந்து உபயவிபூதிஸாம்ராஜ்யத்தை யாள்கின்றதம்முடைய ஸ்வரூபஸ்வபாவங்களை அறியாமல் அநாதிகருமவாஸனையினாலிழுக்கப்பட்டு இவ்விருள்தருமாஞாலத்துளோடி யோடிப்பலபிறப்பும் பிறந்துமற்றோர்தெய்வம் பாடியாடிக்கரைந்தலைகிற சேதனரையுஜ்ஜீவிப்பிக்கத் திருவுள்ளத்தினால் வ்யூஹவிபவாதிரூபங்களைப்போல்ஸ்வயம்வ்யக்தம், திவ்யம், ஸைத்தம், மாநுஷம், என்றுநான்குவிதங்களான க்ஷேத்திரங்களில் அர்ச்சாவதாரத்தைச்செய்தருளினான். இவற்றுள் திருவஷ்டாக்ஷரமஹாமந்திரஸித்தியைப்பெற்றவரான ஸ்ரீ சாலிஹோத்திரமுனிவருக்குப்பிரத்தியக்ஷமாகி சிரமமின்றியே, ஸேவித்தமாத்திரத்தினாலே ஸகலபிராணிகளுக்கும் போகமோக்ஷங்களைத்தருகிற ஸ்ரீ வீரராகவன் எழுந்தருளியிருக்கிற ஸ்ரீ வீக்ஷாரண்யம், புண்யாவர்த்தம் என்கிற திருவெவ்வுளூரானது ஸைத்தக்ஷேத்திரமென்பதை பிர்ம்மாண்டபுராணத்தில் முதல்பாகம்மூன்றாவது அத்தியாயத்தில் (సిద్ధాని సంప్రవక్ష్యామి ప్రసిద్ధాని మహీతలే । సేవామాత్రేణ జీవానాం ముక్తిదాని మహామతే। శాలిహోత్రేణ మునినా వీక్షారణ్యే ప్రతిష్ఠితః) என்றுதொடங்கி பிர்ம்மாநாரதருக்குஉபதேசித்திருக்கிறார். இவ்வெம்பெருமான் தன்விஷயமான திருமொழியை அநுஸந்திப்பார்க்கும் போகமோக்ஷங்களைத்தருவது ஸத்தியமென்பதை (அண்டமாள்வதாணையன்றேலாள்வாரமருலகே) என்கிறபாசுரத்தினால் திருமங்கையாழ்வாரருளிச்செய்தார். இப்படி ஸ்ரீவீரராகவன்ஸர்வஸுலபனாய், ஸகலவிதஇஷ்டபலன்களையும் தந்தருளுவது ஸகலர்க்கும்ப்ரத்தியக்ஷமாகவேஇருக்கிறது. வரமளிப்பதையேவிரதமாகக்கொண்ட அவ்வெம்பெருமானுடையமாஹாத்மியம் கிர்வாணபாஷையிலிருப்பதாலது கற்றவர்க்கேயன்றிமற்றவர்க்கு எளிதிலுபயோகப்படாமையைப்பற்றி, அதைத்தமிழில் சுலபநடையில்வசனரூபமாகஎழுதும்படிபெரியோர்கள் நியமிக்க அவ்விதமாகவே எழுதிஅதையும், அந்தப்புராண சுலோகங்களையும் ஸ்ரீவீரராகவன் விஷயமாக ஆழ்வார் ஆசாரியர்கள அருளிச்செய்தபிரபந்தம், அதின்வ்யாக்கியானம், ஸ்தோத்திரம், அஷ்டோத்தரசதநாமாவலி, இவைகளையும் இதில் யோகப்பிரகரணமான பத்தாவது அத்தியாயத்தில் யோகயாஜ்ஞவல்கியம் ஹடப்ரதீபிகை யோகபாத்மம் இந்தக்கிரந்தங்களிலுள்ள விசேஷங்களையும் சேர்த்து அச்சிடுவித்தேன். எண்ணம்புகுந்து தித்திக்குமமுதாகிய ஸ்ரீ வீரராகவன்விஷயங்களான புராணம், பிரபந்தம், ஸ்தோத்திரம்திருநாமங்கள்இவைகளைஒருபுஸ்தகத்தில்அநுபவிப்பதுபகவத்குணாநுபவ ரஸிகருக்குதேனும், பாலும், கன்னலும், அமுதுமாகித்தித்திக்குமென்று இவ்விதமாகச்செய்யப்பட்டது.

# திருவெவ்வுளூர்ஸ்தலமஹிமாதிசயவிவரணம்.

**வீக்ஷாரண்ய க்ஷேத்திரம்.** ஜ்ஞாநதிருஷ்டிகளன்றிக்கே மாம்ஸதிருஷ்டிகளானமனுஷ்யர்களுக்கும்எம்பெருமானுடைய ஸெவையைத் தருகிறதபோவநம்.

**ஹ்ருத்தாபநாசந (புஷ்கரிணீ.)** ஸ்பர்சிக்க அதிகாரமில்லாத ஜாதியர்தரிசித்தாலும் ஸ்நாநம்செய்ய அதிகாரமில்லாத வியாதிஸ்தர்கள் ஸ்பர்சித்தாலும் ஸ்நாநம்செய்ய அதிகாரமிருக்கிறவர்கள் ஸ்நாநம்செய்தாலும் அவரவர்களுடைய ஹ்ருதயத்திலிருக்கிறஸகல தாபங்களையும் ஒழிப்பதான தீர்த்தம்.

**விஜய விமாநம்.** எம்பெருமான்மஹாவீரர்களான மதுகைடபர்களை இந்தவிமானத்திலெழுந்தருளி யிருந்து ஜயித்தார்(அதவா)ஜயம்பெற்றவராகி இந்தவிமாநத்தில் விச்சிரமித்தார்.

**ஸ்ரீகநகவல்லித்தாயார்.** சக்கிரவர்த்தி த்திருமகனாக அவதரித்து அசுவமேதத்தைச்செய்தருளின ஒருயுகபேதத்தில் தருமபத்தினியாகப்பிரதிஷ்டை செய்துக்கொண்ட ஸ்வர்ணமயமான ஜாநகீதேவியே பின்புஸ்ரீராமபிரானுடைய நியமநத்தினால், தருமஸேநமஹாராஜன் குமாரத்தியானவஸுமதிதேவியாக அவதரித்தாளென்றும் அந்தக்கநகப்ரதிமையின் அவதாரமென்கிறமஹிமையினால் அந்தப்பிராட்டிக்கு கநகவல்லித்தாயார் என்கிற திருநாமம் வந்ததென்றும்.

**ஸ்ரீவீரராகவப் பெருமாள்.** இவளைத்திருக்கல்யாணம்செய்துக்கொண்டும்அந்தஸ்ரீராமன்போல் ஒருக்கால்ச்சரணமடைந்தவனை எவ்வகையாலும் கைவிடாமல் ரக்ஷிப்பதை விரதமாகக் கொண்டும்எழுந்தருளியிருப்பதோடு இவ்வவதாரத்தில் மதுகைடபர்களை ஜயித்து வீரஸ்ரீயால் பரிபூர்ணனாயிருக்கையால் ஸ்ரீவீரராகவன் என்கிற திருநாமம் வந்ததென்றும் பெரியோர்கள் சொல்லுகிறஐதிஹ்யமுண்டு.

**(ஸ்ரீசேஷசயநம்)** இவ்வவதாரத்தில் மதுகைடபர்களொடு செய்தருளின யுத்தத்தினால்வந்த ஆயாஸத்தை நிவிர்த்திசெய்துக் கொள்ளுவதற் கிடானதிவ்யசயநம்.

**ஸ்ரீசாலிஹோத்திருக்கு ப்பிரத்தியக்ஷம்** புருபுண்ணியரென்கிற மஹாப்ராம்மணன் புத்திரனைக்கோறி காம்யசாஸ்திரவிதியை அநுஸரித்துச்செய்த சாலியஜ்ஞத்தில் அவதரித்தவராகையால் சாலிஹோத்திரர்என்கிற திருநாமம்பெற்றார் இவர் பரமபாகவதராய் தபோநிதியாய்தன்னைமஹாவ்ருதத்தினாலு பாவிக்கையில் தைஅமாவாஸ்யையில்இவருக்கு எம்பெருமான் ப்ரத்தியக்ஷமானார்.

திருமழிசைப்பிரான்<br>
திருமங்கையாழ்வார்<br>
ஸ்ரீமத்வேதாந்ததேசிகன் } மங்களாசாஸநம்

శ్రీరస్తు.

# వీక్షారణ్యమాహాత్మ్యమ్.

శ్రీకనకవల్లీసమేతాయ శ్రీవీరరాఘవపరబ్రహ్మణేనమః.

శ్లో॥ వందారుబృందమందారంవీరరాఘవమాశ్రితా । కాచిత్కనకవల్లీతికల్పవల్లీముదేస్తునః ॥ మధుకైటభమథనశ్రమశమనచ్ఛలతస్సమస్తరక్షార్థం । శ్రీశాలిహోత్రసదనేజయతిశ్రీవీరరాఘవోదేవః ॥ వీక్షారణ్యే పుణ్యేవిజయవిమానాంతరాశ్ఫణిశయనే । కనకలతికాసహాయశ్శేతే జగతామధీశ్వరోదేవః ॥ శ్రీరంగలక్ష్మణమునింశరణంప్రపద్యశ్రీశైలశంఖపురరాఘవసూరిసూనుః । వీక్షావనస్థలవిశేషపురాణటీకాం ప్రీత్యై సతాంవరదరాజసుధీర్విధత్తే॥

## அவதாரிகை.

ஸ்ரீயப்பதியான ஸர்வேசுவரன் நர நாராயண ரூபியாக அவதரித்துத் தருமங்களை உபதேசித்தும் அநுஷ்டித்தும் நிலைநிறுத்தினவிடமாகிய ஸ்ரீபதரிகாச்சிரமத்தில் தேவபாகரென்னும் முனிவர் சாலிஹோத்திரமுநீந்திரனை வணங்கி, தவத்தின்பயனைத்தருவதாகிய புண்ணிய க்ஷேத்திரத்தை அருளிச்செய்யவேண்டுமென்று பிரார்த்திக்க அவர்வீக்ஷாரண்ணிய க்ஷேத்திரம் சித்திக்ஷேத்திரமென்றும், முற்காலத்தில்தேவர், அசுரர், என்னும் இருதிறத்தாரும் செய்த யுத்தத்தில் தேவர்களுக்குச்சகாயமாகத் திருமாலான வர்யுத்தம் செய்கையில் பயந்தோடினமதுகைடபர்களைத்தாமும் தொடர்ந்து சென்று பற்பல மரங்களாலடர்ந்தமஹாரண்ணியமான அந்த வீக்ஷாரண்ணியத்தில் மறைந்திருக்கிற அவ்விருவரையும் சக்கிராயுதத்தினால் எரித்து, மற்றுமுள்ள அசுரர்களையும்அழித்து அந்தயுத்தவிடாய்தணிவை முன்னிட்டு, ஸகலரையும் ரக்ஷிக்கவேண்டுமென்னுங் கருணையால் அவ்வரண்யத்தில் தமது பக்தராகிய சாலிஹோத்திரமுனிவருடைய ஆச்சிரமத்தைத்தேடித் தாமே விருந்தாகச்சென்று அவருக்குப் பிரத்தியக்ஷமாகி அவரால் ஆராதிக்கப்பட்டு அவர் அமைத்த கிருகத்தில் சேஷசயனத்தில்படுத்து விடாய்தணிந்து அந்த சாலிஹோத்திருடைய திருமுடியில்தமதுவலதுகையை வைத்துக்கொண்டு இடதுகையில் ஞானமுத்திரைதரித்து, ஸ்ரீதேவிபூதேவிகள்பாதாரவிந்தங்களைவருடவும், நாபீகமலத்தில் நான் முகன்தோற்றவும், சகலபரிஜனங்களும் உபாசிக்கவும், ஸகலரும் காணும்படி விரும்பியவாறேஎல்லா நற்பலன்களைக் கொடுத்துக்கொண்டும், தரிசித்தாலும், ஸ்பர்சித்தாலும், ஸ்நாநம்

செய்தாலும்,இதயத்திலிருக்கிற தாபங்களையொழித்து அபீஷ்டங்களெல்லாவற்றையுந்தருவதாகிய ஹிர்த்தாபநாசந புண்ணியதீர்த்தத்தின் கரையில் விஜயகோடிவிமாநத்தில்ஸ்ரீவீரராகவனென்னுந்திருநாமத்தையுடையவனாகி யோக நித்திரையைச்செய்தருளுகிறானென்றும்,பின்பு ஒருகாலத்தில்ராஜகுமாரனாகவடிவுகொண்டுவந்து தருமசேநமஹாராஜன்கன்னிகையாகிய வசுமதியைவிவாகம்செய்து அவளுடன்சேஷசயனத்தில்ஆரோகணித்தானென்றும்,பிரஜைகள்செய்கிற உபசாரங்களால் யுத்தாயாஸத்தைத்தணித்துக்கொள்ளுகிற வராகச்சயனித்திருக்கிற வீரராகவனை பாஞ்சராத்திரத்தில் சொல்லியவிதியையநுஸரித்து இந்தவிதமாக ஆராதிக்கவேண்டுமென்றும்,அந்த ஹிர்த்தாபநாசிநீயென்கிறபுஷ்கரிணியில் ஸ்நாநம் செய்வதினால்பிரமஹத்திமுதலிய மஹாபாதகங்களும் இந்த இந்த விதமாக ஒழிகின்றன வென்றும், தைமாதத்தின் அமாவாஸ்யைதினத்தில் தேவர்களும், தேவரிஷிகளும், மற்றும் ஸகலரும்வந்து அந்தப்புஷ்கரிணியில் நீராடுவதைக்கண்டு நாரதமுனிவர் ஆச்சரியமடைந்து, தம்பிதாவாகிய பிரமதேவனிடத்தி லிந்தப்புஷ்கரிணியின் மகிமையைக்கேட்டுத் தெளிந்தாரென்றும், இந்தத்தீர்த்தத்தின் கரையில் பிரத்யும் நமஹாராஜன் புத்திரனை வேண்டித்தவம் செய்கையில் தைஅமாவாஸ்யை தினத்தில் வீரராகவன் கருடாரூடராக எழுந்தருளி அவ்வரசனிடத்தில் பிரஸன்னனாகி அவன் பிரார்த்தித்தவண்ணமே நன்மக்களையும், அந்தத்தீர்த்தத்திற்குக் கங்கை முதலிய புண்ணிய தீர்த்தங்களிலும் சிறந்தமகிமையையும்,தைஅமாவாஸ்யை தினத்தில் அந்தப்புஷ்கரிணியில் ஸ்நாநம்செய்கிறவர்களுக்குவிசேஷபலனையும் தந்தருளினானென்றும் ஜகத்காரணபூதனான ஸ்ரீமந்நாராயணன் இவ்வுலகங்களை இவ்விதமாக ஸ்ருஷ்டிக்கிறானென்றும், விஷ்ணுபக்தர்களிடத்தில் அபராதம் செய்தவன் எம்பெருமானால் இவ்விதமாக நிக்கிரகிக்கப் படுவானென்றும், ஆத்மஸ்வரூபம் இன்னதென்றும், யோகம் இவ்விதமானதென்றும்,தேவபாகருக்கு உபதேசித்து அவருடன் சாலிஹோத்திரரும்வீக்ஷாரண்ணியத்திற்குச்சென்று வீரராகவனை உபாசித்து இருவரும் முக்தியை அடைந்தார்களென்றும்,ஆகலால் அரசனே! நீயும் அந்தக்ஷேத்திரத்திற்குச்செல்லக்கடவை என்றும்.சாலிஹோத்திரமுனிவருடையசரித்திரம் இவ்விதமானதென்றும் மார்க்கண்டேயமஹாமுனிவர்ஸஹஸ்ரா நீகமஹாராஜனுக்கு ஸவிஸ்தாரமாக உபதேசித்ததாகிய வீக்ஷாரண்யக்ஷேத்திரம்என்னும்திருவெவ்வுளூரின் மஹிமையானது மார்க்கண்டேயபுராணத்தில் க்ஷேத்திரகாண்டத்தில் நூற்றொன்றுவது அத்தியாயம்முதல் பதினொருஅத்தியாயங்களில் அடங்கியிருக்கிறது. இது வீரராகவன்போல் சகலருக்கும் சுலபமாகப்பயன்படும் பொருட்டு அவனது கிருபாவிசேஷத்தால் தமிழில் எளிதாகியவசநரூபமாக எழுதப்படுகிறது.

శ్రీ ర స్తు.

## వీక్షారణ్యమాహాత్మ్య ప్రారంభః.

సహస్రానీకః॥ అహోమహత్త్వయాప్రోక్తంవిష్ణోరారాధనంమమ।
ఫలంతుతద్విశేషశ్చ దేశకాలవిశేషతః । ద్రవ్యయోగవిశేషైశ్చతథా
కర్తృవిశేషకైః। వర్ణాశ్రమవిశేషైశ్చతథాభక్తివిశేషకైః । విమానక
రణైశ్చాపిగోపురాణాంకృతౌతథా । మండపస్యకృతౌచైవఫలముక్తం
త్వయానఘ । వైదికైస్తాంత్రికైశ్చైవ వ్యామిశ్రైశ్చైవపూజనైః।
తత్తత్ఫలవిశేషైశ్చత్వయోక్తంమునిసత్తమ। కర్మభూమిరియంతాతస్వ
ర్గమోక్షఫలప్రదా। బ్రహ్మాదిదేవతాస్సర్వఋషయశ్చతపోధనాః। అ
స్మిన్భారతవర్షేతుస్వర్గమోక్షఫలప్రదాన్ । వర్ణాశ్రమాన్స్వతాన్ధర్మానధి
కారానురూపతః। కుర్వంతిమునిశార్దూలయేజనాస్సంయతాద్విజాః।
గచ్ఛంతిపరమంస్థాన మనంతంనిరపేక్షకాః । ఏతత్సర్వంసమాఖ్యాతం

---

ஜநமேஜயமஹாராஜனுக்குப் பௌத்திரனும், சதாநீகமஹாரா ஜனுக்குப் புத்திரனுமாகிய ஸஹஸ்ரா நீகமஹாராஜன் மார்க்கண்டேய முனிவரைநோக்கிப்பின் வருமாறுவினவுகின்றான். ஓய் நிர்மலஹிருதயராகித்தத்துவங்களைத் தெளிவிக்கும் தந்தையே! சராசரங்கள் எல்லாவற்றிலும் உள்ளும்புறமும் வியாபித்து நிற்கிறபரமாத்மாவாகியஸ்ரீமந்நாராயணனுக்கு தாஸர்களாகிய சேதநர்களால் செய்யத்தக்கதாகிய திருவாராதநமும், அதனுல் வரும்பலனும், அத்திருவாராதனத்திற்கேற்றவைகளாகிய, தேசம், காலம், வஸ்து, வர்ணுச்சிரமங்கள், பக்திவிசேஷம். பலத்தை விரும்பாமல் கருமங்களைச் செய்கிற கர்த்துருவிசேஷம், ஆகிய இவைகளாலுண்டாகிற பலவிசேஷங்களும், விமாநம், கோபுரம், மண்டபம், இவைகளைச்செய்வதினுல் வருகிறபலன்களும், வேதத்தில் சொல்லியமந்திரங்களாலும், பஞ்சராத்ரவைகாநஸ ஆகமங்களில் சொல்லியமந்திரங்களாலும், இவ்விருவகைமந்திரங்களாலும் முறையே தத்தம் அதிகாரத்திற்கேற்றபடிச் செய்கிற வைதிகம், தாந்திரிகம், வைதிகதாந்திரிகம், என்கிற பூஜைகளால்வரும்பல விசேஷங்களும், இந்தக்கரும பூமியானது அவரவர்களின் கருமங்களுக்கீடாகஸ்வர்க்கம, மோக்ஷம்ஆகியபலனைத்தருமென்பதும், பிரமன் முதலிய தேவர்களும், தபோதநர்களாகிய முனிவர்களும், விரதசீலர்களாகியபிராமணர்களும், ஆகிய இவர்களில் எவர்கள் ஸ்வர்க்கமோக்ஷபலன்களைத் தருவனவாகிய வர்ணுச்சிரமதர்மங்களைஇந்தப்பாரதவர்ஷத்தில் தம் அதிகாரத்திற்கேற்றபடியே பலனை அபேக்ஷியாமல் எம்பெருமானுடைய திருவாராதநமென்னும் புத்தியினுல் செய்கின்றனரோ, அவர்கள் பரமபதத்தைப்பெறுகின்றனர் என்பதுமாகிய இவைஎல்

త్వయాధర్మభృతాంవర । యోగసిద్ధిఃకథంకుత్రకదా కేనభవేన్మమ। కృపయాతత్త్వమాచక్ష్వసర్వజ్ఞభృగునందన ॥ మార్కండేయః ॥ రహస్యంతుత్వయాపృష్టంరాజన్కురుకులోద్వహ । ఋతేదేవప్రసాదాచ్చవక్తుమేతన్మయానఘ। అశక్యంతవరాజేంద్రతత్ప్రసాదాద్బ్రవీమ్యహం। అత్రాప్యుదాహరంతీమమితిహాసంపురాతనం । దేవభాగస్యసంవాదంశాలిహోత్రేణవైపురా॥ సహస్రానీకః ॥ కథంతయోశ్చసంవాదఃస్థానేకుత్రాభవత్పురా । తద్బ్రూహిమునిశార్దూలజ్ఞాత్వామోక్షమవాప్నుయాం ॥ మార్కండేయః ॥ పుణ్యేపుణ్యజనాకీర్ణేరమ్యేబదరికాశ్రమే।ఆసీనంసర్వధర్మజ్ఞంశాలిహోత్రంతపోధనం । దేవభాగోమహాభాగఃప్రణిపత్యప్రపూజ్యచ । సమాహితమనాశ్శాంతంపునఃపప్రచ్ఛతాపసం॥ దేవభాగః ॥ పుణ్యమాయతనంతీర్థంవనంభువనపావనం । యత్ర

---

லாவற்றையும், தார்மிகருக்கும் முனிவருக்கும், சிரேஷ்டராகிய தேவரீர் அருளிச்செய்தீர். பிருகுமுனிவரது வம்சத்தில் அவதரித்தஸர்வஜ்ஞராகிய மார்க்கண்டேயரே ; அடியேனுக்குயோக சித்தியும்,அதற்குரியஇடமும், உபாயமும் எந்தக்ஷேத்திரத்தில் கிடைக்குமோ,அந்தக்ஷேத்திரத்தைக்கருணையால் அடியேனுக்கு அருளிச்செய்யவேண்டுமென்றுவினவ, மார்க்கண்டேய முனிவர் அருளிச்செய்கிறார்.

குருவம்சத்தில் அவதரித்தவனும், நல்லொழுக்கமுடையவனுமாகியஸஹஸ் ராநீகமஹாராஜனே ! நீர்கேட்ட விஷயமானது மிகவும் ரஹஸ்யமாகியும், உத்தம சிஷ்யனுக்கு உபதேசிக்கதக்கதாகியும் இருக்கின்றது, அதுஎம்பெருமானுடைய அநுக்கிரகமின்றிச் சொல்லுதல் அரிது. அதை அவனது திவ்விய கிருபையால் சொல்லுகிறேன். இவ்விஷயத்தில் முற்காலத்தில் தேவபாகருக்கும், சாலிஹோத்திர முனிவருக்கும் நடந்த ஸம்வாதத்தைப் பெரியோர்கள் சொல்லுகின்றனர் என்று முனிவர் சொல்ல ஸஹஸ்ராநீகன். முனிவரே! அந்தஸம்வாதம் எவ்விதமாக எந்தஇடத்தில் முன்உண்டாயிற்று. அதை அருளிச்செய்யவேண்டும்; அதை அறிந்து அடியேன் முக்தியை அடைவேன் என்று விண்ணப்பம் செய்ய மார்க்கண்டேயர் பின்வருமாறு சொல்லுகின்றார்.

ஓஸஹஸ்ராநீகமஹாராஜனே ! கங்கையின் கரையில் நரநாராயணாதிகளான புண்ணிய சாலிகளால் நிறைந்தும், ரம்மியமாகியும் புண்ணியக்ஷேத்திர மாகியுமிருக்கிற பதரிகாச்சிரமத்தில் ஸகலதருமங்களையும் அறிந்துசாந்தராகி வீற்றிருக்கிற சாலிஹோத்திரரென்னுந் தபோதநரைத்தேவபாகரென்னும்முனிவர்சாஷ்டாங்கமாகத்தண்டம்சமர்ப்பித்துவிதிப்படிப் பூஜித்துநிலைநின்றமனதையுடையவராகிவினவுகின்றார்,ஓசாலிஹோத்திரமுநீந்திரரே?தன்னைச்சேவித்தவருக்குப்

త్రయంసముదితంతత్రముక్తిరితిస్మృతా। వదస్వతాదృశంక్షేత్రందుర్లభం
మునిసత్తమ । త్వమేవసకలంవేత్సినాన్యోస్తిభువికశ్చన॥ కేవలంకృప
యాప్రోక్తాస్సర్వేధర్మాస్త్వయామమ। కృతకృత్యస్తథాప్యేతత్ శ్రోతు
మిచ్ఛాప్రవర్తతే॥ శాలిహోత్రః॥ శృణుపుణ్యకథాంభూయఃకథయామి
తపోధన । యస్యశ్రవణమాత్రేణపరాంసిద్ధిమవాప్స్యసి । అస్తిక్షీరవ
హాపుణ్యానదీపరమపావనీ। అగస్త్యాశ్రమసంభూతారజతాద్రినిషేవితా।
పుణ్యనిర్ఝరసంకీర్ణావిచిత్రాసాగరంగమా । దేవర్షిసిద్ధగంధర్వసేవి
తాసర్వదైవతైః। చూతకేసరపున్నాగచంపకాద్యైరలంకృతా। హంస

புண்ணியத்தைத்தருவதாகிய எம்பெருமானுடைய திருக்கோயிலும்
புண்ய தீர்த்தமும், உலகத்தைப் பரிசுத்தமாக்க வல்லதாகியதபோவ
நமும், ஆகிய இம்மூன்றும் எவ்விடத்தில் சேர்ந்திருக்கின்றனவோ
அந்தக்ஷேத்திரத்தில் வாசம்பண்ணுவோர்க்கு இஹத்தில்புத்திர தந
தான்னியாதி போகங்களும், பரத்தில் மோக்ஷமும் உண்டாகுமெ
ன்று முனிவர்களால் நிச்சயிக்கப்பட்டது. முநீந்திரனே ? கிடைத்தற்
கரிதாகிய அவ்வித உத்தமக்ஷேத்திரத்தை அடியேனுக்கு அருளிச்
செய்யவேணடும். தேவரீரே ஸகலத்தையும் அறிந்திருக்கின்றீர்.
உம்மைப்போல் ஸகலக்ஷேத்திர மகிமைகளையும் அறிந்தவர் மற்
றொருவருமில்லை. கேவலம் கருணையாலே அடியேனுக்கு ஸகலதரு
மங்களையும் அருளிச்செய்தீர். அடியேனும் கிருதகிருத்தியனானேன்.
ஆகிலும், எம்பெருமானது திருக்கோயில், தீர்த்தம், தபோவநம், இம்
மூன்றுங் கூடிச்சிறந்ததாகிய திவ்விய க்ஷேத்திர மகிமையைக்கேட்க
எனக்கு இச்சை உண்டாயிருக்கிறது. அதை அருளிச்செய்யவேண்டு
மென்று வினவ சாலிஹோத்திர முனிவர் அருளிச்செய்கிறார். ஓய்
தேவபாகமுநீந்திரரே ! எந்தக்கதையைக்கேட்டு உத்தமசித்தியை அ
டைவீரோ. அந்தப்புண்ணியகதையை உமக்குச்சொல்லுகிறேன் கே
ளும். அகஸ்தியருடைய ஆச்சிரமத்திலுண்டாகி நடுவில் * வெள்ளிம
லையை அடைந்து, புண்ணியகரமானமலை வெள்ளத்தினால் நிறைந்து,
விசித்திரமாக ஸமுத்திரத்தைச் சேர்வதாகி, பால்போன்றநீரை உ
டையதாகிய க்ஷீரநதி என்னும் மஹாபுண்ணியநதி ஒன்று இருக்கி
றது. அது தேவரிஷிகள், சித்தர், கந்தருவர், மற்றும் தேவதைகள்
ஆகிய இவர்களால் ஸ்நாநாதிகளுக்காக உபாசிக்கப்பட்டும், மா, புன்
னை, சுரபுன்னை, சம்பகம், முதலிய பற்பல மரங்களால் அலங்கரிக்கப்
பட்டும், ஹம்ஸம், நீர்க்காக்கைமுதலிய ஜலபக்ஷிகளால்நிறைந்தும், தா
மரை, செங்கழுநீர், முதலான வைகளால் மிகுந்த அழகைப்பெற்றும்

* இந்த வெள்ளிமலையானது விந்திய பர்வதத்திற்கு தென்மு
னையிலிருப்பதாக ராமாயணத்தில் பிரசித்தம்.

కారండవాకీర్ణాపద్మకల్హారశోభితా।తస్యాశ్చోత్తరదిగ్భాగే దేవఖాతో మహాహ్రదః। ఫుల్లపద్మవనాకీర్ణోవీచీమాలాసమాకులః। దర్శనాత్ స్పర్శనాత్ స్నానాత్సర్వహృత్తాపనాశనః। అతస్సర్వేషులోకేషు నామ్నాహృత్తాపనాశనః। తత్తీరేపుళినేరమ్యేసర్వభూతమనోహరే। సర్వాశ్రయస్సర్వసుహృత్పద్మపత్రనిభేక్షణః।అనంతభోగశయనేయోగనిద్రాం నిషేవతే। దేవర్షిసిద్ధగంధర్వమనుష్యాస్తత్రసంగతాః। జ్ఞాతుంతమర్చితుంద్రష్టుమవకాశంనలేభిరే। పుణ్యావర్తమితిఖ్యాతంతత్ క్షేత్రంపుణ్యవర్ధనం। యత్రశేతేజగన్నాథఃపురాణఃపురుషోత్తమః। మహద్వనమభూత్తత్రసింహవ్యాఘ్రసమాకులం। చంద్రాదిత్యప్రభాస్తత్రనవ్యగాహంతభూతలే। బహుపుష్పసమాకీర్ణంమహాపాదపసంకులం। వృతం

---

இருக்கிறது. அந்தப்பாலாற்றிற்கு வடபுறத்தில்மலர்ந்ததாமரைக்காட்டினல் சூழப்பெற்றும், அலைகளின் வரிசையைப் பெற்றுமிருக்கிற தேவநிர் மிதமானஒருபெரிதாகிய மடுவுண்டு. அந்தமடுவின்தீர்த்தமானது தரிசனத்தினலும், ஸ்பரிசத்தினலும், ஸ்நாநத்தினலும், பிரஜைகளுடைய மனதிலுண்டாகிய ஸகலதாபங்களையும் ஒழிப்பதாகையால்ஸகலலோகங்களாலும் ஹிர்த்தாபநாசநதீர்த்தமென்று புகழப்பெறும். அதன்கரையில் மனத்திற் கினிதானமணற்குன்றில் ஸகலமான சராசரங்களுக்கும் ஆச்சிரயமானவனும், சத்துரு, மித்திரன் என்கிற பேதமில்லாமல் எல்லாரிடத்தும் ஒரேதன்மையாகிய அருளுள்ளவனும், அலர்ந்தழகிய தாமரைமலரினி தழ்களை யொத்த திருக்கண்களையுடையவனுமாகிய ஸ்ரீ வீரராகவன் திருவனந்தாழவா னுகிற திவ்யசயநத்தில் யோகநித்திரைசெய் தருளுகிருர். அந்த எம்பெருமானை, பக்தஜநங்கள் இடையருமற் சூழ்ந்திருப்பதனல் அவனை அறிவதற்க்கும், ஆராதிப்பதற்கும, கண்களால் சேவிப்பதற்கும், அவ்விடத்தில் கூடியிருக்கிற தேவர்கள், ரிஷிகள், சித்தர், கந்தருவர், மனிதர்ஆகிய ஒருவருக்கும் சமயம்கிடைக்கவில்லை. சமயத்தைப்பெற்று அப்பொழுது சேவிக்கிருர்கள். ஸகல லோகநாதனும், புராணனுமாகிய புருஷோத்தமன், மஹாநந்தத்துடன் திருப்பள்ளிகொள்ளும்படி மிகுந்த அழகைப்பெற்றிருக்கிற அந்தக்ஷேத்திரமானது ஒருதரம்செய்த புண்ணியத்தைப்பலவிதமாக விருத்திசெய்கிறதாகையால் புண்ணியாவர்த்தமென்று பிரசித்தமாயிற்று. அந்தக்ஷேத்திரத்தில் சிங்கம், புலி, முதலான துஷ்டமிருகங்களால் பயங்கரமாகிய மஹாவநமிருக்கிறது. அதில் சந்திர சூரியர்களுடைய பிரகாசமும், உள்ளேநுழைவதில்லை. அந்தவநமானது பெரிதாகிய பலவிதமரங்களால் நிறைந்தும், பலவகையாகிய புஷ்பங்களால் சூழ்ந்தும், அவ்விடத்

యాజ్ఞికవృక్షైశ్చపాలాశఖదిరాదిభిః। పురాకల్పేతుమునయస్తపస్తప్యం
తిచాత్రవై। యజ్ఞైశ్చబహవోదేవాయజంతిపురుషోత్తమం। రాజాన
శ్చాత్రబహవోహయమేధేనవైహరిం। ఇష్ట్వాచత్రదివంయాతాదృశ్యం
తేచాత్రయోగిభిః। యోగినోమునయశ్చాత్ర నివసంతిగుహాశ్రయాః।
వీక్ష్యతేభగవాంస్తత్రమానుషేణాపిచక్షుషా । అతస్తద్విపినంలోకే
వీక్షారణ్యమితిశ్రుతం । విజయంనామతత్ప్రోక్తందివ్యమాయతనంహ
రేః। యత్రస్థిత్వాజగన్నాథోజితవాన్మధుకైటభౌ । పురారాజన్హరి
స్సాక్షాద్భక్తానుగ్రహకారకః । విష్ణోరాయతనంతత్రవనంతీర్థంచసంగ
తం। తత్రగత్వామునిశ్రేష్ఠయజస్వస్వార్థసిద్ధయే । మమాపిగేహం

---

தில் வசிக்கிற முனிவர்களின் யஜ்ஞங்களுக்கு அநுகூலங்களாக பலா
சு கருங்காலிமுதலிய யஜ்ஞவிருக்ஷங்களைப்பெற்றும் பிரகாசிக்கிறது;
முந்திய கல்பத்தில் முனிவர்கள் அருந்த வத்தைச்செய்து சித்திய
டைந்தது இந்தமஹாவநத்தில்தான். தேவர்கள் யஜ்ஞங்களால்புரு
ஷோத்தமனை ஸ்ரீமந்நாராயணனை ஆராதித்துப் பலன்களைப் பெற்ற
துமிவ்விடத்தில்தான், அப்படியே அநேகம் அரசர்கள் அசுவமேத
ங்களால் யஜ்ஞேசுவரனாகிய விஷ்ணுவை ஆராதித்து ஸ்வர்க்கத்
தை அடைந்தனர், சித்தியைப்பெற்ற பின்னும் ஸ்வர்க்கம் முதலா
னலோகங்கள் நின்றும் வீரராகவனை அடிபணிவதற்காக இந்த
க்ஷேத்திரத்திற்குவந்து யோகிகளால் காணப்படுகின்றனர். இவ்வர
ணியத்திலுள்ள குகைபோன்ற கொடிவீடுகளில் அநேகம் யோகிகள்
இக்காலத்திலும் வீற்றிருக்கின்றனர். பின்னும் அந்தமஹாவநத்தில்
விஷயசுகத்தில் அமிழ்ந்திருக்கிறமனிதருடைய கண்களுக்கும் பகவா
ன் சுலபமாகக்காணப்படுகிறுனு கையால் எம் பெருமானுடைய தரி
சநத்தைத் தருகிறவநமென்னும் பொருளுள்ள வீக்ஷாரண்ணிய மெ
ன்று உலகத்தில் பிரசித்தமாயிற்று. அந்த எம்பெருமானுடைய திவ்
வியவிமாநமானது விஜயவிமாநமென்று சொல்லப்படுகிறது. முற்கா
லத்தில் ஜகதீசுவரனாகிய ஹரியானவர் பக்தாநுக்கிரகத்தைச் செய்
யும்பொருட்டு தானே எழுந்தருளி மதுகைடபர்களென்னும் அசுரர்
களை ஜயித்து விச்சிரமித்தஇடமாகையால் விஜயகோடி விமாநமாயிற்
று. ஆகையால் தேவபாகரே; எம்பெருமானுடைய விமாநமும், தபோ
வநமும், புண்ணிய தீர்த்தமும் இம்மூன்றும் வீக்ஷாரண்யத்தில் சேர்
ந்திருக்கின்றன. ஆதலால் அவ்விடத்தில்சென்று உமது அபீஷ்டம்
சித்திப்பதற்காக வீரராகவனை ஆராதியும். யானும் இந்தப்பதரி
காச்சிரமத்திலுள்ள பர்ணசாலையைவிட்டு யோகசித்திக்காகவும், சக
லபாபங்களும் நசிப்பதற்காகவும் அந்தக்ஷேத்திரத்தில் நிச்சயமாக
வசிப்பேன் என்றுர், ஸஹஸ்ராநீகமஹாராஜனே ; மிகுந்ததவத்தை

త్యక్త్వాపినివాసస్తత్రహిధ్రువం।భవేత్సమాధిసిద్ధ్యర్థంసర్వపాపక్షయా
యచ। ఇత్యుక్తశ్శాలిహోత్రేణసర్వజ్ఞేనతపస్వినా । నారాయణం
జగన్నాథంప్రణమ్యార్చితుమిచ్ఛయా। దేవభాగఃప్రసన్నాత్మాదేవదే
వంప్రసాదితుం । స్తుతిపూజానమస్కారైఃదృష్టుంతత్రగతస్తదా।శా
లిహోత్రోऽపిధర్మాత్మాతస్మాదత్రగతస్తదా। నాస్తితత్సదృశంక్షేత్రం
లోకేపరమపావనం । అబుద్ధిపూర్వజాతానిబుద్ధిపూర్వకృతానిచ।రహ
స్యానిప్రకాశానిగురూణిచలఘూనిచ । హృత్తాపనాశనస్నానంపాపా
న్యాశువ్యపోహతి।తత్రగత్వావినశ్యంతివ్యాధయఃపూర్వసంచితాః।హృ
త్తాపనాశనస్నానాద్విష్ణోరాలయదర్శనాత్।హృత్తాపనాశనేస్నాత్వా
వత్సరంమాసమేవవా। యథేష్టంలభతేమర్త్యస్తతోయాతిపరాంగతిం।
కన్యకాసత్పతింలబ్ధ్వాచిరంజీవిష్యతిధ్రువం । నారీతువత్సరంస్నాత్వా

---

புடையவராகி அதனால் சகலத்தையும் உள்ளபடி அறிந்தவரான ஸ்ரீ சாலிஹோத்திரமுனிவரா லிவ்விதமாகச்சொல்லப்பட்டு, மனந்தெளிந்து, தேவபாகர் ஸர்வலோகத்திற்கும் ஸ்வாமியாகிய ஸ்ரீமந்நாராயணனை விஜயகோடி விமானத்தில் கண்ணாரக்கண்டு களித்து ஸ்துதி பூஜா நமஸ்காரங்களால் தன்னிடத்தில அநுக்கிரகமுள்ளவராகச் செய்துகொள்ளக்கருதி அந்தவீக்ஷாரண்ய க்ஷேத்திரத்தை அடைந்தார். தருமமே ஒருவடிவு கொண்டாற்போலிருக்கிறசாலிஹோத்திர முநிவரும் அப்பொழுதே பதரிகாச்சிரமத்தி லிருந்துவீக்ஷாரண்ய க்ஷேத்திரத்திற்கு எழுந்தருளினார், ஆதலால் அதற்குஸமாநமாகியும், உத்தமமாகியும், புண்யகரமுமாகியுமிருக்கிற க்ஷேத்திரம் உலகத்தில் எங்குமில்லை. அதற்கு நிதர்சநமாக இந்தக்ஷேத்திரத்திலுள்ள ஹிர்த்தாபநாசநமென்னும் புண்ணிய தீர்த்தத்தில் செய்தஸ்நாநமானது பாபமென்று அறிந்துசெய்தவை, அறியாமல்செய்தவை, ரஹஸ்யமாகச்செய்தவை, பலர் அறியச்செய்தவை, அதிகமானவை, அல்பமானவைஆகிய பலவகைப் பாதகங்களையும், விரைவில் ஒழித்துவிடுகிறது. அந்தப் புண்ணியாவர்த்தமென்னும் வீக்ஷாரண்ய க்ஷேத்திரத்தில்சென்று ஹிர்த்தாபநாசந புஷ்கரிணியில் ஸ்நாநம்செய்வதினாலும். வீரராகவனுடைய திவ்யவிமாநத்தைத் தரிசிப்பதினாலும் முன்செய்த வினையின்பயனாக விளைந்திருக்கிற பலவிதவியாதிகளும் நசிக்கின்றன. பின்னும் அந்த ஹிர்த்தாப நாசந புஷ்கரிணியில் மனிதன், ஒருவர்ஷகாலம், அல்லது ஒருமாதகாலம், ஸ்நாநம்செய்தானாகில் அவன் விரும்பின ஸகலபலன்களையும் இகத்தில்பெற்று முடிவில் மேலானகதியை அடைகிறான். கன்னிகையானவள் ஒருவர்ஷம், அல்லதுஒருமாதம், அந்தப்புண்ணியதீர்த்தத்தில் ஸ்நாநம்செய்தாளாகில், குணம், சீலம், கல்வி, ஆயுள், இவைகளை விசேஷமாகப்பெற்றி

సుపుత్రాన్ లభతేబహూన్ । బ్రాహ్మణాఃక్షత్రియావైశ్యాశ్శూద్రాశ్చ
ద్విజసత్తమాః । తత్రవిష్ణుంసమాశ్రిత్యగచ్ఛంతిపరమాంగతిం । బ్రహ్మ
చారీగృహస్థశ్చవానప్రస్థోథభిక్షుకః । తత్రవిష్ణుంసమాశ్రిత్యగచ్ఛంతిపర
మంపదం । వీక్షారణ్యేజగత్పుణ్యేస్నాత్వాహృత్తాపనాశనే । విజయం
చవిమానంచదృష్ట్వాయేర్చంతిమానవాః। అర్ఘ్యపుష్పాదిభిర్నిత్యంశయా
నంమధుసూదనం । తేయాంతిపరమంస్థానంయద్వైపశ్యంతిసూరయః।
వీక్షారణ్యేతుబహవోమునయస్సంతితాపసాః। తపస్సమాధియోగేనయా
తాస్తద్వైష్ణవంపదం । అస్యక్షేత్రస్యమాహాత్మ్యంకథయామిపునస్తవ।
తచ్ఛ్రుత్వాసహసాచిత్తప్రసాదస్తేభవిష్యతి । పయస్విన్యాదృషద్వత్యాః
కుశస్థల్యాయదంతరం ॥ ఏకయోజనవిస్తారంపంచయోజనమాయతం।వీ

---

ருக்கிறபுருஷனைப்பதியாகப்பெற்று நெடுங்காலம் வாழ்வாள், புத்திர
னில்லாதஸ்த்ரீயானவள் பதியின் அநுமதியினால் அந்தத்தீர்த்தத்தில்
ஒரு வர்ஷகாலம் ஸ்நாநம்செய்தாளாகில் வெகுநன்மக்களைப்பெற்று
மகிழ்வாள். ப்ராம்மணன்,க்ஷத்திரியன்,வைச்யன்,சூத்ரன்,ஆகியநான்
குவர்ணத்தோரும். அந்தணரில் சிறந்தவரான முனிவரும், அந்தக்ஷே
த்திரத்தில் ஸ்ரீ வீரராகவனைச் சரணமடைந்து பரகதியைப்பெறுகின்
றனர். அது போலவே பிர்ம்மசாரீ, கிரகஸ்தன், வாநப்ரஸ்தன், ஸந்
நியாஸீ, என்னும் நான்கு ஆச்சிரமத்தாரும் அவ்விடத்துச்சென்
று எம்பெருமானைச் சரணமடைந்து மூக்தியைப்பெறுகின்றனர்.
உலகத்தில் சிறந்தபுண்ணிய க்ஷேத்திரமாகிய வீக்ஷாரண்ணியத்தில்
ஹிர்த்தாபநாசநபுஷ்கரிணியில் நீராடி விஜயகோடி விமாநத்தை
க்கண்குளிரச் சேவித்து அதில் சயநித்திருக்கிற ஸ்ரீ வீரராகவனை அ
ர்க்கிய புஷ்பாதிகளான உபசாரங்களைச் சமர்ப்பித்து எவர்கள் நித்தி
யமும் ஆராதிக்கின்றனரோ அந்தமஹாத் மாக்கள் நித்திய சூரிகள்
நித்யமும் அநுபவிக்கிற ஸ்ரீ வைகுண்டலோகத்தை அடைகின்றனர்.
அந்த வீக்ஷாரண்ணிய க்ஷேத்திரத்தில் எம்பெருமானை இடைவி
டாது தியானிக்கிற முனிவர்களும்,தவம்செய்கிற வர்களும், அநே
காக இருக்கின்றனர், அப்படியே முற்காலத்திலும் அந்தக்ஷேத்திர
தில் அருந்தவம், ஸமாதி ஆகிய இந்த உபாயததினால் முனிவர்கள்
விஷ்ணுபதத்தைப்பெற்றனர். தேவபாகரே இன்னமும் அந்தக்ஷே
த்திரத்தின் மகிமையை உமக்குச்சொல்லு கின்றேன், அதைக்கேட்
டுவிரைவில் உம்முடைய மனந்தெளியும். தென்புறத்தில் விர்த்த
க்ஷீரநதிக்கும், வடக்கில் குசஸ்தலீ நதிக்கும், மேல்புரத்தில் கல்லா
ற்றுக்கும், நடுவில்தெற்கு வடக்கில் ஒருயோஜனை அகலமும், கிழக்
குமேர்க்கில்ஐந்து யோஜனை நீளமும் உடையதான இந்த வீக்ஷார
ண்ணியக்ஷேத்திரமானது மஹாபுண்ணியக்ஷேத்திரமென்றுபிரசித்த

క్షారణ్యమితిఖ్యాతం క్షేత్రం భువనపావనం । అత్రిర్భృగుర్వసిష్ఠశ్చ గౌ
తమశ్చాపి కాశ్యపః । భరద్వాజః పులస్త్యశ్చ నారదః పులహః క్రతుః। యా
జ్ఞవల్క్యో మునిశ్రేష్ఠో జమదగ్నిరథాంగిరాః। శాలిహోత్రోథ భగవాను
పమన్యుశ్చ శౌనకః। అన్యే చ మునయశ్శ్రేష్ఠా బహవస్తత్ర సంగతాః। నానా
గుహాశయాశ్చాత్ర స్నాత్వార్చంతి జగత్ప్రభుం । గుహాశ్చాప్యత్ర దృశ్యం
తే ఋషీణాం మునిసత్తమ । యజ్ఞవాటాశ్చ దృశ్యంతే మునీనాం భావితా
త్మనాం। అద్యాపి యాజ్ఞికైర్వృక్షైః కుశైర్బహుభిరావృతాః । సర్వౌష
ధిసమాయుక్తం సర్వర్తుఫలపాదపం । కాలధర్మసమాపన్నం వనం సర్వ
సమృద్ధిమత్ । అసురా దానవా దైత్యాః పురా దృష్ట్వా మహద్వనం । వివి
శుర్యజ్ఞహంతారో బ్రహ్మఘ్నా మునిఘాతకాః। మాయావేషం సమాస్థాయ
మాయయా హంతుముద్యతాః । సర్వాన్ జఘాన దేవేశో యజ్ఞఘ్నాన్ముని
సత్తమ ॥ సహస్రానీకః ॥ మధుకైటభయోర్యుద్ధం కథం సమభవత్పురా।

---

மானது. அந்த க்ஷேத்திரத்தில் அத்திரி, பிருகு, வசிஷ்டர், கௌதமர் காச்யபர், பாரத்வாஜர், புலஸ்தியர், நாரதர், புலஹர், கிரது, யாஜ்ஞவல்க்கியர், ஜமதக்கி, அங்கிரஸ், சாலிஹோத்திரர், உபமந்யு, சௌநகர், ஆகிய இம்மஹர்ஷிகளும், மற்றும் பலமுனீந்திரர்களும் குகைகளில் வசித்துக்கொண்டு அந்தப்புஷ்கரிணியில் நீராடிஜகதீசுவரனான வீரராகவனை ஆராதிக்கின்றனர். அவ்விடத்தில் மஹர்ஷிகளுடைய குகைகளும், யக்கியசாலைகளும் காணப்படுகின்றன, இக்காலத்திலும் அந்தத்தபோவநமானது. யக்கியத்திற்கு யோக்கியங்களான விருக்ஷங்கள், அநேகதருப்பைகள் இவைகளால் நிறைந்தும், வாழை, துவரை, நெல், முதலிய ஸகலஔஷதிகளோடுகூடியும், ஸகலருதுக்களிலும், பலிக்கிற விருக்ஷங்களால் அடர்ந்தும், வசந்தம் முதலிய காலங்களுக்கேற்ற குணங்களைப்பெற்றும், புஷ்ப பலங்களால் நிறைந்தும் பிரகாசிக்கிறது. அந்த மஹாரண்ணியத்தைக்கண்டுதநு, திதி, இவர்களின் மக்களான அசுரர்கள், அதில் நடக்கிற யஜ்ஞங்களை அழிக்கவும் யஜ்ஞசீலரான பிராமணர்களையும், முனிவர்களையும் கொல்லவும் கருதிமாயாரூபிகளாகிவந்து சேர்ந்தனர். அந்தயஜ்ஞத்தை அழிக்க வந்த அசுரர்களனைவரையும், யஜ்ஞேசுவரனாகிய ஸ்ரீவிஷ்ணுதேவன் ஸம்ஹாரித்தார் என்று மார்க்கண்டேய முனிவர் அருளிச்செய்யக்கேட்டு ஸஹஸ்ராநீகமஹாராஜன் முனிவரே முன் இந்த வீக்ஷாரண்யத்தில்மது கைடபர்களுக்கும் விஷ்ணுவுக்கும் எவ்விதமாக யுத்தம் நடந்தது - அதை அடியேனுக்கு விஸ்தாரமாக அருளிச் செய்ய வேண்டுமென்று பிரார்த்திக்கமார்க்கண்டேயர் பின்வருமாறு சொ

విష్ణోరత్రమహాభాగవదవిస్తరతోమునే ॥ మార్కండేయః ॥ మధుకైటభయోర్యుద్ధంవిష్ణునాప్రభవిష్ణునా। త్రైలోక్యభీషణంఘోరంమహాభూతవినాశనం। విత్రస్తావిబుధాదైత్యారాక్షసామనుజాదయః। నలేభిరేస్థితింసర్వేకృత్యాకృత్యవిమోహితాః। నచచారరవిర్వ్యోమ్నినక్షత్రాణినరేజిరే। నవవౌశ్వసనోలోకేనజజ్వాలహుతాశనః। నస్వాధ్యాయవషట్కారాఃనివృత్తాశ్చైవసత్క్రియాః। నిశ్చేష్టాఃప్రాణినస్సర్వేబభూవుర్భయవిహ్వలాః। సంప్రవృత్తేమహాయుద్ధేనజయాపజయాత్తదా। విజయస్త్వేకదావిష్ణోరాసీద్బలవతఃప్రభోః। తతోమధురతిక్రుద్ధోగదాముద్యమ్యవేగవాన్। జఘానగరుడంభూయోయుద్ధాయసముపస్థితః। ప్రహరంతంతుతందృష్ట్వారాక్షసంభీమవిక్రమం। ఆదిదేశమహాచక్రంత్రైలోక్యదహనక్షమం। తద్దృష్ట్వాభయవిత్రస్తౌవీర్యవంతౌజగత్త్రయే। సముద్రాన్సరితశ్శైలానన్విష్యాన్విష్యసత్వరౌ। సంస్థానమాత్మరక్షార్థ

---

ன்னார். ஸஹஸ்ராநீகமஹாராஜனே! மூவுலகங்களையும் நடுங்கச்செய்வதாய், மஹாபயங்கரமாய், பஞ்சமஹாபூதங்களும் நிலைதவறி அழியும்படியான மஹாயுத்தமானது ஸர்வலோக பிரபுவான ஸ்ரீ விஷ்ணுவோடு கூடமது கைடபர்களுக்கு நடக்கையில் தேவர், அசுரர், ராக்ஷஸர், மனிதர் ஆகிய அனைவரும் பயந்து விவேகமற்று மயங்கிநிலைதவறினார்கள். அந்த அசுரர்களிருவரும் ஸத்தியலோகம் வரையில் வளர்ந்திருக்கையால் ஆகாயத்தில் ஆதித்தன் சஞ்சரிக்க இல்லை. நட்சத்திரங்கள் விளங்கஇலலை. வாயுவீசஇல்லை. அக்கினிதேவன்ஜ்வலிக்கஇல்லை. வேதாத்யயநமும், வஷட்காரமந்திரங்களும் நின்று விட்டன. ஸத்கர்மங்கள் ஒழிந்துவிட்டன. ஸகலபிராணிகளும் மிகுந்த பயத்தினால் ஒரு விதசேஷ்டையுமின்றி நின்றன. இவ்விதமாக ஜயாபஜயங்கள் தோன்றாத சமயுத்தம் நடக்கும்போது மஹாபலசாலியும், ஸகலவல்லமை யுள்ளவரும், அவ்வசுரர்களுள்ளும் வியாபித்துநிற்கிறவருமாகிய ஸ்ரீவிஷ்ணுவுக்கு ஜயம் உண்டாயிற்று. பின்பு மதுவானவன் கடுஞ்சினங்கொண்டு பின்னும் யுத்தம்செய்யவந்து பெருமானுக்கு வாகனமாகயிருக்கிறகருடனை கதாயுதத்தினால் ஓங்கி அடித்தான். அப்படி அடிக்கிறபயங்கரனான அந்தஅசுரனைக்கண்டு மூவுலகங்களையும் எரித்துவிடவல்லதான தமது மஹாசக்கிராயுதத்தை ஸ்ரீவிஷ்ணுவானவர் ஏவ அதைக்கண்டு வீரர்களாகியமது கைடபர்கள் மிகவும் பயந்து அந்தச்சக்ராயுதத்திற்கு அகப்படாமல் மறைந்து, தங்களை ரக்ஷித்துக்கொள்ள மூவுலகத்திலும் இடந்தேடிக்கொண்டும், பெருங்கடலையும், ஆறுகளையும், மலைகளையும் பார்த்துக்கொண்டும் எங்கும் இடங்கிடைக்காமல் விரைந்தோடிவந்து இந்தவீக்ஷாரண்ணிய

మలబ్ధ్వాతౌజగత్త్రయే । వీక్షారణ్యమనుప్రాప్తా వాత్మానమభిరక్షితుం।
తౌవనాంతర్గతౌజ్ఞాత్వారాక్షసౌమధుకైటభౌ । జఘానసహసావిష్ణు
శ్చక్రేణోభౌమహాబలౌ । రుధిరేణతయోఃక్లిన్నామహీసాగరమేఖలా।
నష్టమంధంతమస్సద్యశ్శాంతోజగదుపప్లవః । అన్యాంశ్చాప్యసురాంస్తత్ర
భగవాన్మధుసూదనః । శ్రమాపనయనార్థంతుభగవాన్మహతోమహాన్।
శాలిహోత్రస్యచమునేరాశ్రమేతదనుజ్ఞయా। అగారాభ్యంతరేశేతే
భుజంగశయనేతదా । సర్వశ్రమాపనోదాయసపష్యోద్యకృతశ్రమః । అ
ద్యాపిదృశ్యతేరాజన్ప్రసన్నఃపురుషోత్తమః । మహాహ్రదస్యపుళినేస
ర్వభూతమనోరమే । నివాసంరోచయామాసశ్రీమానంబుజలోచనః।
విష్ణుపారిషదాహ్యేతేస్వేస్వేకర్మణ్యవస్థితాః । బ్రహ్మాచతత్రదేవేశం

---

த்தை அடைந்தனர். எம் பெருமான் இவர்கள் வீக்ஷாரண்யத்தில் புகுந்து மறைந்திருப்பதைக்கண்டு மஹாபலசாலிகளாகிய அவ்விருவரையும் தம்சக்கிரத்தினுல் ஸம்ஹரிக்க அவர்களுடைய ரக்த தாரையினுல் கடல் சூழ்ந்தபூமியும் நனைந்தது.

பின்பு சூரியசஞ்சாரத்தினுல் உலகத்தை விட்டுப்பேரிருள்நீங்கிற்று. முன் உண்டாகியிருந்தசகலமான ஆபத்துக்களும் ஒழிந்தன. அந்தமஹாவநத்தில் மறைந்திருந்தமற்றுமுள்ள அசுரர்களையும் அந்த வீக்ஷாரண்யத்தில் தானே அழித்து விட்டு, அந்த வநத்தைமுனிவர்களுக்கு அநுகூலமாக்கிக் கொடுத்து, பிர்ம்மாதிகளான மஹான்களைக்காட்டிலும் மஹானுகியும், ஜ்ஞானம்,பலம் முதலிய ஆறுமஹாகுணங்களையுடையவனுகியு மிருக்கிற எம்பெருமான் அந்தயுத்தவிடாய்தீர சாலிஹோத்திரமுனிவருடைய ஆச்சிரமத்தில் அவருடைய அநுமதியால் உள்புரத்தில் தம்ஸங்கல்பததினுல் அப்பொழுது எழுந்தருளின சேஷனுகிய திவ்ய சயனத்தில் சயனித்தருளினுன். ஸஹஸ்ராநீகமஹாராஜனே ! ஒருவகையாலும் ஒருவிதவிடாயுமில்லாத பரமாத்மா வானபுருஷோத்தமன். இந்த ஸம்ஸார சக்கிரத்தில் அகப்பட்டு,பற்பலதுக்கங்களை அநுபவிக்கிற ஸகல பிராணிகளுடைய சிரமங்களையும் தீர்ப்பதற்காகத்தான் சிரமப்பட்டு அந்த ஸம்ஸார மண்டலத்தை உகந்து இதன்னடுவில்படுக்கை போட்டுக்கொண்டு பிரஸந்நனுக இப்பொழுதும் ஸ்ரீவீரராகவ ரூபியாக சயநித்திருக்கிறுன். ஸ்ரீமஹாலக்ஷ்மியோடு எப்பொழுது மிணங்கியிருக்கிறவனும், தன்கண்ணழகினுல் ஸகலரையும் வசப்படுத்திக்கொள்ளுகிற வனுமாகியஸ்ரீவீரராகவன் அந்த ஹ்ர்த்தாப நாசிநீ என்னும் புஷ்கரிணியின்கரையினது மணற்குன்றில் ஸகலபிராணிகளுக்கும் மனத்திற்கினிதான இடத்தில் எப் பொழுதும் நித்யவாஸத்தைத்திருவுள்ளம் பற்றினுன். அப்பொழுது எம்பெருமானுடைய பரிஜநங்களான அநந்தகருடா

విధినాపూజయద్ధరిం । దేవాస్సర్వేచమునయఋషయశ్చతపోధనాః।ప్ర
త్యేకంచతమర్చంతిశాస్త్రదృష్టేనకర్మణా। యథావిభవలబ్ధేనద్రవ్యేణపు
రుషోత్తమం ।। అర్ఘ్యాచమనపాద్యాద్యైస్స్తోత్రైర్నానావిధైస్తుతం। తు
ష్టువుఃపుండరీకాక్షంయథాజ్ఞానంద్విజోత్తమాః। సర్వేపారిషదాస్తత్ర
స్వేస్వేకర్మణ్యవస్థితాః । హృత్తాపనాశనతటేదేవదేవంసిషేవిరే।శంఖ
చక్రగదాపద్మఖడ్గశస్త్రాణ్యశేషతః । శాంతౌతుగరుడానంతౌవిష్ణుభూ
తాన్యనేకశః । మధుకైటభహంతారంపరివార్యోపతస్థిరే । ఏకాంత
మాస్థితోదేవఏకాంతిభిరుపాసితః । సేవ్యమానఃపరిజనైస్స్తూయమానో
ద్విజోత్తమైః । అనంతభోగశయనేసుష్వాపశ్రమశాంతయే । తంప్రణ

---

திகளும், அந்தக்ஷேத்திரத்தில் தத்தம் கைங்கர்யங்களில் நிலை பெற்ற வர்களாகி விட்டனர். அவ்விடத்தில் பிரமனும் தேவ தேவனுகிய ஸ்ரீ வீரராகவனை விதிப்படி ஆராதித்தான். அப்படியே மற்றும், தேவர் களும், ருஷிகளும், சாஸ்திரத்தில் சொல்லிய கருமங்களாலும், தத்தம் சக்திக்கிடாகக் கிடைத்த வஸ்துக்களாலும், புருஷோத்தமனைத் தனித்தனியே ஆராதிக்கின்றனர். பிராம்மணர்கள். அர்க்கியம், பா த்யம், ஆசமநம் இவைகளாலும், மற்றும் உபசாரங்களாலும் பூஜி த்து அநேகவிதங்களான ஸ்துதிகளாலும், தம்ஜ்ஞான சக்திக்குத்த க்கபடி ஸ்ரீபுண்டரீகாக்ஷனை ஸ்துதிசெய்தனர் ஸ்ரீ விஷ்வக்ஸேநர்முத லானநித்யசூரிகளும். தத்தம்கைங்கர்யங்களைச்செய்கிறவர்களாகிஹிர் த்தாப நாசந புஷ்கரிணியின் கரையில் சேஷசாயியான தேவ தே வனைச் சேவித்தனர். சங்கம், சக்கிரம், கதை, பத்மம், கட்கம், வில், மற்றும் சகலதிவ்யாயுதங்களும், விரோதமில்லாமல் சாந்தி குணத் தைப்பெற்றவர்களான அநந்தகருடர்களும், மற்றும் விஷ்ணுபரிவா ரங்களும், மது கைடப ஸம்ஹாரியான ஸ்ரீ வீரராகவனைச் சூழ்ந்து கொண்டு உபாசித்தனர். உலகஸ்ருஷ்டி ரக்ஷணுகி லீலைகளைச் செய் கிற எம் பெருமான்மது கைடபர்களைக் கொன்ற பின்பு வேட்டை யாடிவந்த அரசன் ஏகாந்தமான விடத்திலிருந்து தன் இஷ்டபரிஜந ங்களைக்கொண்டு விடாயைத்தணித்துக் கொள்ளுவதுபோல் ஏகாந்த மான சாலிஹோத்திரருடைய பர்ணசாலையை அடைந்து தன்னையே ஸகல விதத்தாலும் சரணமாகப்பற்றி நிற்கிற பரமைகாந்திகளால் உ பாசிக்கப்பட்டும் பரிஜநங்களால் ஆச்ரயிக்கப்பட்டும், மஹாபிராம் மணர்களால் வேதமந்திரங்களைக்கொண்டு ஸ்துதிக்கப்பட்டும், குளிர்ந் தநல்மணம் பெற்று மெதுவாயிருக்கிற ஸ்ரீசேஷனுகிறதிவ்யசயநத்தி ல் ஸகல சிரமங்களும் தீரத்திருக்கண்வளர்ந் தருளினுன்.

వ్యప్రబుద్ధం చ దివ్యభోగైర్మనోరమైః। సనత్కుమారో భగవానర్చయామాస మాధవం । సేవ్యమానం శ్రియా పార్శ్వే ధరణ్యా చ యశస్వినం। దీప్యమానం తయోర్మధ్యే దదృశుస్తం దివౌకసః। హేమకుంభైస్సముద్ధృత్య తోయం హృత్తాపనాశనే । అభ్యషించన్పరం దేవం సిద్ధాశ్చ మహర్షయః। పద్మయోనిముఖాస్సర్వే దేవా దైతేయమానవాః। అర్చయామాసురవ్యగ్రాశ్శాస్త్రదృష్ట్యా జనార్దనం। ఆరాధితో జగన్నాథో దేవదేవస్సనాతనః । తానువాచ జగన్నాథస్త్రైలోక్యభయనాశనః। ఇమం దేశముపాగమ్య కృతస్నానా దృఢవ్రతాః । మాం ద్రక్ష్యథాథ యుష్మాకం హృత్తాపం నాశయామ్యహం ॥ మార్కండేయః ॥ ఏవముక్త్వా జగత్స్వామీ తాన్నిర్యాప్య తతో హరిః। యుద్ధాయాసపరిశ్రాంతో యోగనిద్రాముపా

---

பின்பு ஒரு காலத்தில் ஸநத்குமாரபகவான் திருப்பள்ளியுணர்த்தித்து யிலெழுந்திருக்கிற ஸ்ரீவீரராகவனைச் சேவித்து மனத்திற்கினியவைகளான திவ்ய உபசாரங்களால் ஆராதித்தார். அப்பொழுது ஸ்ரீதேவியும் பூமிபிராட்டியாரும் இருபுறத்திலும் மகிழ்ந்து சேவிக்க அவர்கள் நடுவில் நிகரற்ற திவ்யலாவண்யத்தினால் விளங்குகிறவனும், ஆச்ரிதஸம்ரக்ஷணத்தினால் பெரும்புகழ்பெற்றவனுமான வீரராகவனைச் சகலமான தேவர்களும் தர்சித்தனர். சித்தர்களும், மற்றும்முனிவர்களும், ஹிர்த்தாபநாசநபுஷ்கரிணியின்திவ்வியதீர்த்தத்தைப்பொற் குடங்களாலெடுத்து பரதேவதையான வீரராகவனுக்குத்திருவபிஷேகம் சமர்பித்தனர். நான்முகன் முதலிய ஸகலதேவதைகளும், அசுரரும், மனிதரும், சாஸ்திரவிதியின்படி பக்திசிரத்தையுடன் அந்தஜநார்த்தனனை அர்ச்சித்தனர். ஸகலலோகங்களுக்கும் ஸ்வாமியாயும், தேவர்களுக்கு தேவனாயும், புராணபுருஷனாயும், தன் அபயஹஸ்தத்தினால் மூவுலகங்களுக்கும் ஸகலபயங்களையும் ஒழிப்பவனாயுமிருக்கிற வீரராகவன் இவ்விதமாக ஸகலராலும் ஆராதிக்கப்பட்டு அவர்களை நோக்கி எம்மடியார்களே ! ஸ்ரீவைகுண்டத்தில் திருமாமணிமண்டபத்தில் நித்தியவாஸம்செய்கிற என்னையும் தன்னழகினாலே வசப்படுத்திக்கொண்டதாகிய இந்த வீக்ஷாரண்ணியக்ஷேத்திரத்தை நீங்கள்அடைந்து ஹிர்த்தாபநாசந புஷ்கரிணியில் ஸ்நாநம் செய்து உறுதியாகிய விரதமுடையார்களாகி இப்படி ஸ்ரீதேவிபூதேவிகளுடன் சங்கசக்கிரகதாபாணியாய் பிரகாசிக்கிற என்னைச்சேவியுங்கள். உங்களுடைய மனதிலிருக்கிற ஸகலதாபங்களையும் ஒழித்து யான் ரக்ஷிங்கிறேன் என்று அருளிச்செய்து அவர்களுக்கு விடைகொடுத்து, போர்புரிந்த இளைப்பினால் வருந்தினவராகி லோகரக்ஷண சிந்தையைச்செய்கையாகிய யோகநித்திரையைப் பின்னும்செய்தருளினார். அப்பொழுது வாயுவானது, தாமரை செங்கழுநீர் முதலிய

విశత్ । పద్మకల్హారసౌగంధీసుగంధోగంధవాహనః । క్షీరిణీలహరీసం
గశీతళశ్చైశనైర్వవౌ । శ్రీదేవీకరసంస్పర్శచందనాగరుకుంకుమైః । సాం
స్పర్శనైర్మహాభోగైస్తథాచాభ్యవహారికైః । ఔపచారికభోగైశ్చయ
థైవక్షీరసాగరే । తాపత్రయవిహీనశ్చస్వభావాదేవమాధవః । లోక
తాపత్రయహరే తాపత్రయకథాకుతః । తథాపిలోకందృష్ట్వాతుమాయ
వైతద్వ్యపోహతి । ఏవంసంపూజ్యవిధినాశాలిహోత్రోమహాము
నిః । జగామవైష్ణవంతేజస్త్వమప్యేవంకురూద్వహ । ఆరాధయస్వదే
వేశంహరింనారాయణంప్రభుం । పూజ్యమానేజగన్నాథేమాయయామ

---

நறுமலர்களுடைய மணத்தைப்பெற்றும், பாலாற்றின் அலைகளைத் தழுவிக்குளிர்ந்தும் மெதுவாகவீசிற்று. பெரியபிராட்டியார் தாமரை மலரினும் தளிரிலும் மெதுவான தம்திருக்கைகளால் வீரராகவனுடையபாதகமலங்களைப்பற் றிவருடினள். திருமெனிக்கு ஏற்றதாகிய திவ்யசந்தநம், அகில்புகை, குங்குமக்குழம்பு தூபம், தீபம், புஷ்பம் இவைகளாலும், அக்காரவடிசில் அப்பங்கலந்தசிற்றுண்டி முதலிய பக்ஷ்யபோஜ்யங்களாலும், நாநாவித உபசாரஙகளாலும், குடை, திருவெண்சாமரம், திருவிளக்குகள், ஸங்கீதங்கள் பாடல், வாத்தியங்கள், இவைகளாலும், வீரராகவன் ஆராதிக்கப்பட்டு, திருப்பாற்கடலில்விச்சிரமித்ததுபோல் இங்குயுக்ததகிஞல் உண்டான ஸகலவிடாய்களும் தீரவிச்சிரமித்தான். இயல்பாகவேதாபத்திரயங்களில்லாதவனும், ஸகலலோகங்களுடைய தாபங்களேயும் ஹரிப்பவனுமாகிய மாதவனுக்குதாபம் உண்டென்கிறகதை ஏது? ஆகிலும், தனக்கு அடிமையாயிருக்கிற ஸகலலோகத்தையும் கடாக்ஷித்து அது தனக்குஉபசாரங்களைச் செய்து உய்யவேண்டுமென்னும் திருவுள்ளத்தினுல் தம்ஸங்கல்பத்தினுல் ஒருயுத்தவிடாயை ஏறிட்டுக்கொண்டு அதை இந்தக்ஷேத்திரத்தில் பிரஜைகள்செய்கிற உபசாரங்களால் நிவிர்த்திசெய்கிறவராக விச்சிரமித்தார். குருகுலத்தரசனே! சாலிஹோத்திரமுனிவரிவ்விதமாக சாஸ்திரவிதிப்படி வீரராகவனை ஆராதித்து தேஜோராசியாகியிருக்கிற விஷ்ணுபதத்தைப்பெற்ருர். ஆகையால் நீயும்அவ்விதமாகவே அந்தக்ஷேத்திரவாசியாகி தேவதேவர்களானபிர்ம்மாதிகளையும் ஸ்ருஷ்டிமுதலிய தொழில்களில் ஏவுகிற ஸர்வேசுவரனும், சேதநாசேதநங்களில் உள்ளும்புறமும் வியாபித்து அவைகளுக்குகதியாய் நிற்பவனும், சகலஇஷ்டத்தையும் சாதித்துத்தரவல்லவனும், அடியார்களுடைய ஸகலதுக்கங்களையும்ஹரிப்பவனும், ஸகலகல்யாணகுணபரிபூர்ணனுமாகிய வீரராகவனை ஆராதிக்கக்கடவை. மஹாசத்துருவாகியிருந்த மதுவைத் தம்ஸங்கல்பத்தினுல்கொன்று ஸகலலோ

ధుసూదనే । ఆగతో రాక్షసః కశ్చిత్ క్షుధార్తో వేగవాం స్తథా । తం దృష్ట్వా స తు సంతుష్టో హంతుం దూరముపాగతః । అనుభావాత్తు దేవస్య తం సమీక్ష్య ప్రవేశనే। అసమర్థస్తదా క్రుద్ధో వాక్యమేతదువాచ హ।కస్త్వమద్య వసన్మర్త్యో మమ దృష్టిపథం గతః । పునః ప్రాణైస్సమాయుక్తో నిర్భయో జీవసి క్షణం । త్వద్బలాదన్యతో వా త్వాం ధర్షితుం నైవ శక్యసే।భక్షణం మే క్షుధార్తస్య లబ్ధమేవ న లభ్యతే । తం సమీక్ష్య స దుర్ధర్షం రాక్షసః పాపదర్శనః।గుహాంతరేషు సంవిష్టాన్మునీనన్యాన్సమాహితాన్।అభిదుద్రావ వేగేన క్షుధార్తో రాక్షసాధమః । తదాలయ సకాశాత్తు నిర్గతో దివ్యపూరుషః।జఘాన రాక్షసం తత్ర ముద్గరేణ తదాజ్ఞయా। యమదూతాగతా నేతుం రాక్షసం పాపకారిణం । రురోధ తానతి క్రుద్ధో విష్ణుశ్చాయతవీక్షణః।

---

*கங்களையும் ரக்ஷித்தலோகநாதனாகிய வீரராகவன் தேவர்களாலும், சாலிஹோத்திரமுனிவராலும் பூஜிக்கப்பட்டுவருகையில் ஒருகாலத்தில் ஒருராக்ஷஸன் பசியினால் வருந்தி மிகுந்தவேகத்துடன் வீக்ஷாரண்ணியத்திற்குவந்து அவ்விடத்தில் சயனித்து யோகநித்திரைசெய்கிற மஹாபுருஷனான வீரராகவனைக்கண்டு நமக்கு இந்தப்புருஷன் உணவாகக்கிடைத்தானென்று மனமகிழ்ந்து அவரைக்கொல்லுவதற்காக வெகுதூரத்தில் வருகையில்தானே வீரராகவனுடைய மகிமையினால் அவரைக்கிட்டிச்செல்ல வல்லமையற்றவனாகி அதனால்கடுஞ்சினங்கொண்டு பின்வருமாறுசொன்னான். அடாநீயார் இந்தக்காட்டில் வசிக்கிற ஒருமனிதனாகி என்கண்ணில் அகப்பட்டும் பின்னும் பிராணனோடு பயமற்று க்ஷணகாலமாகிலும் வசிக்கிறாயே; இது உனதுபலத்தினாலோ அல்லது வேறுவிதத்தினாலோ நீகொல்லுவதற்கு அசாத்தியனாகிறாய். மிகுந்தபசியினால்வருந்துகிறஎனக்கு ஆஹாரம் கிடைத்தும் அதுவாய்க்கு எட்டவில்லையேஎன்றுசொல்லி அந்த அசுரன் மிகுந்தகோபத்தினால் அவரைவிட்டு பாபதிருஷ்டியாகையாலே பின்னும் அந்தவீக்ஷாரண்யத்தில் குகைகளின் நடுவில் உட்கார்ந்து மனதைப்பொறிவழிசெலுத்தாமல் வீரராகவனையேதியானிக்கிற முனிவர்களையும் மற்றும்சிலரையும் கொல்லுவதற்காக விரைந்தோடுகையில் அந்தவீரராகவனுடைய திருக்கோயிலின் அருகிலிருந்து ஒருதிவ்யபுருஷன் கிளம்பி எம்பெருமானுடைய ஆஜ்ஞையினால் முத்காராயுதமாகிய சம்மட்டியினால் அந்த ராக்ஷஸாதமனைக்கொல்ல அப்பொழுது மஹாபாபாத்மாவாகிய அந்தராக்ஷஸாதமனை யமதண்டனையைச் செய்விப்பதற்காக யமதூதர்கள் பிடிக்கையில் விசாலங்களான திருக்கண்களையுடையவனான எம்பெருமான் கோபித்துக்கொண்டு அந்தயமகிங்கரர்களைத் தடுத்தருளினான்.*

(యమకింకరా ఊచుః) రాక్షసోయమతిక్రూరః పాపినాంపాపకృత్తమః। యమస్యవశమాసాద్యభోక్తుమర్హతియాతనాం ॥ శ్రీభగవానువాచ॥ పుణ్యకృత్పాపకృద్వాపిజాతోవాత్రమృతోపివా । నలభేతమహద్దుఃఖం యమలోకప్రవేశనం ॥ యమకింకరాః ॥ ప్రాతికూల్యంచరేద్యస్తువిష్ణోరమితతేజసః। పర్యాయేణానుభోక్తవ్యానారకాస్తేనయాతనాః॥ నిత్యవైరీజగద్యోనేరేషవైయమశాసనాత్ ॥ శ్రీభగవత్పారిషదాః॥ అస్తుపాపసమాచారోనీచోధర్మపరాఙ్ముఖః। ఏతత్ క్షేత్రంసమాసాద్యభవితాపుణ్యకృత్తమః। పుణ్యాపుణ్యనియంతృత్వంయమస్యహ్యుపలక్ష్యతే। విష్ణోఃప్రభావాదత్రైవయమాజ్ఞానప్రవర్తతే ॥ పలాయధ్వమితో

---

அப்பொழுதுயமகிங்கரர்கள் சுவாமி ! இந்தராக்ஷஸன் மிகவுங்கொடியனாகியும் உலகத்திலுள்ள மஹாபாபிகளுக்குள்முதல்வனாகியுமிருக்கிறான் ஆதலால் இவன்யமனுடையசாஸநத்திற்கு உட்பட்டுமஹாநரகயாதனைகளை அனுபவிக்கத் தக்கவன் என்றுவிண்ணப்பம்செய்ய, பகவான் யமகிங்கரர்களே ! புண்ணியசாலி யாகிலும், பாவத்தையே செய்கிறவனாகிலும் நமது வீக்ஷாரண்ணிய க்ஷேத்திரத்தில் பிறந்தாலும் இறந்தாலும் அவன் பெருந்து யரைத்தருவதாகிய யமலோகத்தை யடையானென்று நியமிக்கையில், பின்னும்அந்தக்கிங் கரர்கள் சுவாமியை நோக்கி, சுவாமி ! மஹாபிரபாவசாலியாகி சுருதிஸ்மிருதிகளாகிய சாஸ்திரமுகத்தாலே உலகத்திற்குமர்யாதை யைஸ்தாபித்து சர்வஸாக்ஷியாய் விளங்குகிற தேவரீருடைய சாஸநமாகியசாஸ்திரவிதியைமீறிநடந்துதேவரீருக்குப்பிரதிகூலர்களான சகலரும்,யமசாஸநத்திற்கு உட்பட்டு ஒருநரகயாதனையை அனுபவித்த பின்மற்றொரு நரகயாதனை என்றிந்தக்கிரமமாக ஸகலநரக யாதனைகளையும் அநுபவிக்கத்தக்க வர்களாகையாலிந்த ராக்ஷஸன்ஜகத்காரண பூதரானதேவரீருக்குளெப்பொழுதும்பிரதிகூலத்தையேசெய்கிறநித்யவிரோதியாகிறானென்று விண்ணப்பம் செய்கையில்வீரராகவனுடைய இங்கிதத்தினால் விஷ்ணுகிங்கரர்கள் அவர்களை நோக்கிச்சொல்லுகின்றனர் ஓயமகிங்கரர்களே பாபத்தொழிலைச்செய்கிறவனாகிலும் நீசனாகிலும் தருமத்தில்பராங்முகமாயிருப்பவனாகிலும்இந்தவீக்ஷாரண்ணியக்ஷேத்திரத்தை அடைந்தானாகில் அப்பொழுதேமஹா புண்ணியசாலியாவான். புண்ணியபாபங்களைப் பற்றிய சாஸநம்யமனுக்கிருக்கினும், இந்த க்ஷேத்திரத்தில் வீரராகவனுடைய மகிமையினால் அந்த யமனுடைய ஆஜ்ஞை செல்லாது. இங்கேதிருக்கண்வளர்ந்தருளுகிறவர் உங்கள் யமனையும் முடிவில் ஸம்ஹரிக்கிறவரானவிஷ்ணுவென்று அறியுங்கள். ஆகையாலிந்த ராக்ஷஸனை விட்டுஓடுங்களென்றுகட்டளை

దూతాఃవిహాయైనంనిశాచరం । గతేషుతేషుయామ్యేషువిష్ణుదూతాస్తు
తంభృశం । హృత్తాపనాశనేతీర్థేసంస్నాప్యపురుషాకృతిం । విష్ణోర్ని
వేదయామాసూరాఘవాయమహాత్మనే । తతఃప్రసన్నదృష్ట్యాతంసమ
వేక్ష్యజనార్దనః ॥ సమ్యక్ జ్ఞానందదౌతస్మైరాజన్నారాయణస్తదా। స
చనిష్కల్మషోభూత్వాస్మరన్జన్మశతాన్యపి । అర్చయిత్వాజగన్నాథందివ్య
జ్ఞానేనవైతదా । వివేశవైష్ణవంతేజస్తతఃక్షేత్రానుభావతః । అహంచ
దేవదేవేశమర్చయామిదినేదినే । పుష్యమాసేవిశేషేణజాతేచంద్రా
ర్కసంగమే । హృత్తాపనాశనస్నానంచాంద్రాయణశతాధికం । సోమ
సూర్యగ్రహణయోర్యస్స్నాయాన్నియతవ్రతః సమర్చయిత్వాదేవే
శందైవపిత్ర్యకరస్తదా । విముక్తస్సర్వపాపేభ్యోవిష్ణుభక్తోభవిష్యతి ।

---

யிட அவர்கள் அப்படியேசென்றபின் விஷ்ணுதூதர்கள் ஸ்வாமிஸங்கல்பத்தினாலே புருஷரூபியாகி இருக்கிற அந்தராக்ஷஸனை ஹிர்த்தாபநாசந புஷ்கரிணியில் ஸ்நாநம்செய்வித்து அலங்கரித்து மஹாத்மாவாய் ஒருதரம் சரணமடைந்தவனை எக்காலத்திலும் எவ்வகையாலும் கைவிடாது ரக்ஷிக்கும் விரதமுடையவனாகிய ஸ்ரீராமபிரானது அவதாரமானவீரராகவனுடைய திருமுன்பேநிறுத்திஸர்வரக்ஷகனாகியதேவரீரைச்சரணமடைந்தான் இவனை ரக்ஷிக்கவேண்டுமென்று விண்ணப்பம்செய்ய ஸ்ரீவீரராகவனும்பிரஸந்நமான திருக்கண்களால் அவனைக்குளிரக்கடாக்ஷித்து அவனுக்குதிவ்யஜ்ஞாநத்தைத்தந்தருளினார். அந்த அநுக்கிரகத்தினால் அந்தக்ஷணத்தில் தானேஅவன் ஸகலகல்மஷங்களும் ஒழிந்தவனாகி, தனது அனேகமான பூர்வஜன்மங்களையும் ஸ்மரித்து, தபித்து ஸகலருக்கும்ஸ்வாமியாய் தமக்கு வகுத்தஸ்வாமியாயிருக்கிற வீரராகவனை திவ்யஞானத்தினால் அர்ச்சித்து அந்தவீக்ஷாரண்யக்ஷேத்திரமகிமையால்விஷ்ணுவின்தேஜஸ்வரூபமாக விளங்குகிறபரமபதத்தைஅடைந்தான். மஹாராஜனே! தேவதேவனான அந்தவீரராகவனைத்தினந்தோறும் அர்ச்சிக்கின்றேன் பின்னும் விசேஷமாக புஷ்யமாஸமென்னும்தைமாதத்தில் சந்திராதித்யர்கள்சேருகிறதினமாகிய அமாவாஸ்யையில் அந்த ஹிர்த்தாபநாசநதீர்த் தத்தில்செய்கிற ஸ்நாநமானது நூறுசாந்திராயண விரதங்களிலும் அதிகபலனைத்தருவதாகும். பின்னும் சந்திரசூரியகிரஹணங்களில் விரதமுடையவனாகி ஹிர்த்தாபநாசநதீர்த்தத்தில் ஸ்நாநம்செய்து தேவரிஷிபித்ர்தர்ப்பணங்களையும்செய்துஉபஹாரங்களைச்சமர்ப்பித்துவீரராகவனைப்பூசிக்கிறவன் இவ்வெம்பெருமானுக்கு திருப்திசெய்கிறவனாகி ஸகலபாதகங்களில் நின்றும் விடுபட்டு விஷ்ணுபக்தனாகிறான் எவன் பருவங்கள் தோறும்

యత్రాఽఽమోనియత స్తత్ర స్నాయాత్పర్వణిపర్వణి। తత్తత్సర్వమవాప్నో తిదేవదేవప్రసాదతః ॥మార్కండేయః॥ శ్రుణురాజన్ పురావృత్తంరహస్యంతుప్రభావతః। యస్యశ్రవణమాత్రేణహృదయంచప్రసీదతి। దేవానామసురాణాంచమహాద్యుద్ధమభూత్పురా। నిర్జితావిబుధాస్సర్వేప్రముముపురితస్తతః। కదాచిత్సంగతాస్సర్వేబ్రహ్మాణంసంపరిపూజ్యతేత్రస్మై నివేదయామాసురసురాణాంవిచేష్టితం। తచ్ఛ్రుత్వావిబుధైఃప్రోక్తం బ్రహ్మలోకపితామహః। చింతయిత్వావినిశ్చిత్యజగాదత్రిదివేశ్వరాన్। యుష్మాకందానవానాంచవయంసాధారణాస్సదా। సాహ్యంచయువయోస్తత్రకర్తుంయుక్తమతోహినః। విజయోపాయమధునాయుష్మాకం కరవాణ్యహం। భగవంతంసమాసాద్యవిష్ణుంసర్వవరప్రదం।యూయం వయంజగత్సర్వంమునయశ్చతపోధనాః। పృచ్ఛామస్సకలంతస్మాద్గచ్ఛధ్వంహరిమంజసా। శ్వేతద్వీపేజగన్నాథోదుర్దర్శఃపురుషోంజసా। అ

---

னைவிரும்பி விசுவாஸத்துடன் அந்தப்புஷ்கரிணியில்ஸ்நாநம்செய்கிருனே அவன் தேவதேவனான வீரராகவனுடைய அநுக்கிரகத்தினுல் அந்தப்பலனை அடைகிருன் என்றுசொல்லி மார்க்கண்டேய முனிவர் பின்னும்ஒருஅதிசயத்தைச் சொல்லுகிருர் அரசனேகேள் ரஹஸ்யமான ஒரு இதிஹாஸத்தைச் சொல்லுகின்றேன் அதைக் கேட்டாயாகில் உனதுமனதில் தெளிவுஉண்டாகும். முற்காலத்தில் தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் மஹாயுத்தம் நடக்கையில் தேவர்கள் அபஜயமடைந்து பற்பலவிடங்களில் ஓடிப்பின்பு ஒருகாலத்தில் ஒன்றுசேர்ந்து பிர்ம்மாவைப்பூசித்து அசுரர்களுடையநடத்தையைச்சொல்ல அதைக்கேட்டகமலாஸநன் ஆலோசித்து அந்தத்தேவர்களை நோக்கிச்சொன்னுர். தேவர்களே உங்களுக்கும் அசுரர்களுக்கும் நான் எப்பொழுதும் அநுகூலனுகையால் உங்களிருவருக்கும் சகாயம்செய்யவேண்டியவனுகிறேன்ஆகையால்உங்களுக்குஇந்தத்தருணத்தில் ஜயிக்க உபாயத்தைச்செய்கிறேன்ஸகலகுணங்களையும் தன்னுட்கொண்டவைகளான ஞாநம்,பலம், ஐசுவர்யம்,வீர்யம், சக்தி தேஜஸ்என்னும் ஆறுமஹாகுணங்களைப் பெற்றவனும், எங்கும் எப்பொழுதும் வியாபித்திருப்பனும், அடியார்களுக்கு ஸகலவரங்களையும் அருள்பவனுமாகிய எம்பெருமானை நீங்களும், நாமும், ஸகலரும் அருந்தவமுனிவர்களும் அடைந்து ஜயோபாயத்தைக் கேட்போம், நீங்கள் அடியார்களது துயரைஹரிப்பவனுகிய ஸ்ரீமந்நாராயணனைச் சீக்கிரத்தில் அடையுங்கள் அந்தஸகலலோக நாதனுகிய மஹாபுருஷன் சுவேதத்வீபத்தில் சீக்கிரத்தில் தரிசிக்க அரியன். ஆனல் அந்த ஜக

ల్పాయాసేన సాన్నిధ్యం హ్యత్ర దేవప్రసాదతః। వీక్షారణ్యే జగన్నాథస్సర్వభూతసుహృత్పరః । దయార్థం సర్వభూతానామద్యాపి పరిదృశ్యతే । అనంతభోగశయనే శేతేయం మధుసూదనః । తం యజధ్వమథ క్షిప్రం ప్రదాస్యతి చవో హితం । తస్మిన్ప్రసన్నే దేవేశే కిముల భ్యం జగత్త్రయే । పరిగృహ్యాస్య వచనం శిరోభిస్త్రిదివౌకసః । వీక్షారణ్యమనుప్రాప్య స్నాత్వా హృత్తాపనాశనే। విజయాయతనం ప్రాప్య ప్రణమ్య పురుషోత్తమమ్। ప్రత్యక్షం దదృశుస్సర్వే దేవదేవం సనాతనం। భక్త్యా ప్రణమ్య దేవేశమర్చయామాసురవ్యయమ్॥ ఓం ॥

ఇతి శ్రీమార్కండేయ పురాణే క్షేత్రకాండే వీక్షారణ్య
క్షేత్రమహాత్మ్యకథనం నామ ఏకశతతమోఽధ్యాయః.

---

ஈசுவரனே அவனது திவ்யாநுக்கிரகவிசேஷத்தினாலே ஜம்பூத்வீபத்தில் பாரதகண்டத்திலிருக்கிற வீக்ஷாரண்ணிய க்ஷேத்திரததில் அல்பாயாஸத்தினாலேதானே ஸகலருக்கும் சுலபனாகிஸான்னித்தியத்தைச்செய்தருளுகிறான் அவன் ஸகலபிராணிகளுக்கும்,இஷ்டனும், ஸகலருக்கும் நாதனுமாகிறான். ஸகலபிராணிகளுடைய விஷயத்திலும் தயை செய்வதற்காகவே இப்பொழுதும் அந்தக்ஷேத்திரத்தில் ஸகலராலும் தர்சிக்கப்படுகிறவனாகி மதுவென்னும் அசுரனை அழித்து அந்தவிடாய்தீர சேஷசயநத்தில் யோகநித்திரையைச் செய்கிறான் அப்படிசகலருக்கும் சுலபனாக எழுந்தருளியிருக்கிற அந்த வீரராகவனை நீங்கள் ஆராதியுங்கள் உங்களுக்கு சீக்கிரமாக ஹிதமானவரத்தைத் தந்தருளுவர், ஸகலதைவதைகளுக்கும் ஈசனான அந்தவீரராகவனே பிரஸன்னனானபின்பு இம்மூவுலகத்திலும்நமக்கு துர்லபமானவஸ்து என்னஇருக்கிறதுஎன்று சதுர்முகன் உபதேசித்ததை ஸகலதேவர்களும் சிரசினால் அங்கீகரித்து வீக்ஷாரண்ணிய க்ஷேத்திரத்தை உடனேஅடைந்து ஹிர்த்தாபநாசன மஹாதீர்த்தத்தில் ஸ்நாநம்செய்து விஜயகோடி விமாநத்தில் எழுந்தருளியிருக்கிற புருஷோத்தமனைத் தண்டம் சமர்ப்பித்துஸகலரும் தேவதேவனான ஸ்ரீவீரராகவனைக்கண்ணாரக்கண்டு களித்துமஹாபக்திபுடன்பின்னும் தண்டம்சமர்பித்து அந்தப்பரதேவதையை அர்ச்சித்தார்கள்.

ஸ்ரீமார்க்கண்டேய புராணத்தில் க்ஷேத்திரகாண்டத்தில் வீக்ஷாரண்ணிய மாஹாத்மியத்தைச்சொல்லுவதாகிய நூற்றொன்றாவது அத்தியாயம் முடிந்தது.

ద్వితీయాధ్యాయప్రారంభః.

శ్లో॥ (మార్కండేయః) తందృష్ట్వాపుండరీకాక్షమభీష్టఫలదాయి
నం । ప్రణిపత్యసమభ్యర్చ్యతుష్టువుర్హృష్టమానసాః ॥ దేవాః ॥ ఓంన
మఃపరమార్థాయపరాయపరమాత్మనే।విశ్వేశ్వరాయవిశ్వాయవిశ్వాధా
రాయతేనమః। పరాపరస్వరూపాయపురుషాయాక్షరాత్మనే।సత్యజ్ఞాన
పరానందకల్యాణగుణమూర్తయే । శత్రుమిత్రవిభిదేనత్వమేవబహుధా
స్థితః।త్వదిచ్ఛామనువర్తంతేసర్వప్రాణభృతోఽవ్యయ । అంతఃప్రవిశ్యభూ
తానిచరాణిస్థావరాణిచ। ప్రశాసితాస్యమోఘాత్మావేదాంగాన్యఖిలా

## இரண்டாவது அத்தியாயம்.

பின்னும் மார்க்கண்டேய முனிவர் ஸஹஸ்ராநீகமஹாராஜனை நோக்கி அருளிச்செய்கிறார்.

ஸஹஸ்ராநீகனே! அந்தவிஜயகோடி விமாநத்தில் ஸகலமான அபீஷ்டபலன்களேயும் தருகிறவராகப் பிரகாசிக்கிறவரும் கண்ணழகினாலே எல்லாருடைய மனதையும் தன்வசமாக்கிக்கொண்டு குளிர்ந்த கடாக்ஷத்தினால் ஸகலதாபத்தையும் போகடுகிறவருமான ஸ்ரீவீரராகவனைத் தேவர்கள் தண்டம் ஸமர்ப்பித்து மனதில் மஹாநந்தமடைந்து அர்ச்சித்து ஸ்துதிசெய்தார்கள்.

பரமபுருஷார்த்தபூதனாய், அகாரத்தின்பொருளாகி ஸர்வரக்ஷகனாயிருக்கிற ஸ்ரீவீரராகவனுக்கேயாம் தாஸராகின்றோம். யாம்எமக்கும். மற்றொருவருக்கும் அடியோமல்லோம். பிரகிருதிஜீவன் இவர்களேக்காட்டிலும் வேறுபட்டவனும், ஜ்ஞாநத்தினாலும் ஸ்வருபத்தினாலும் எங்கும் வியாபித்த பரமாத்மாவானவனும், ஸகல பிரபஞ்சத்தையும் ஆளுகிறசெங்கோலுடையவனும், அந்தப்பிரபஞ்சத்தைச்சரீரமாக உடையவனும், அந்தப்பிரபஞ்சத்தை ஸ்வரூபத்தாலும்ஸங்கல்பத்தாலும் தரிக்கையாலே அதற்கு ஆதாரமானவனுமான உனக்கு தண்டம் ஸமர்ப்பிக்கிறோம். சேதநாசேதநருபியும், ஸகல வஸ்துவுக்கும் முந்தினவனாக இருக்கையால் புருஷனும், ஸ்வருபவிகாரமும் ஸ்வபாவவிகாரமுமில்லாதவனாகையாலே அக்ஷரனும், ஸத்யஜ்ஞாநாநந்தஸ்வருபியும், கல்யாணகுண மூர்த்தியுமாகிய உனக்கு அனேகதண்டம் ஸமர்ப்பிக்கிறோம். சத்துரு, மித்திரன் முதலியபேதத்தினால் நீயேவெகுவிதமாக இருக்கின்றாய், ஸ்வருபம், குணம், இவைகளொன்றிலும் நாசமில்லாதவனாகையால் அவ்யயனானவனே! உனது இச்சையைத்தானே ஸகலபிராணிகளும் அநுஸரித்துநடக்கின்றன. நீயேசராசரங்களெல்லாவற்றிலும் உட்புகுந்து நின்று சாஸநம் செய்கிறாய், ஸத்யஸங்கல்பனே ஸமஸ்தங்களான வேதங்களும், வேதாங்கங்களும், நாமரூபங்களேப்பெற்றுக் காணப்படுகிற

న్యపి । నామరూపమయంయచ్చ సర్వ మేవత్వ మేవహి । బ్రహ్మారుద్రో
మహేంద్రోగ్నిరంతకోవరుణోనలః । ధనదో భాస్కరశ్చంద్రో వసవశ్చ
ప్రజాపతిః।గ్రహాశ్చఋషయశ్చైవతథాప్రాచేతసశ్చవై। సర్వేసురగణా
శ్చైవదైత్యదానవరాక్షసాఃసర్వేషాంపరమాత్మాతస్సర్వ మేవత్వముచ్య
సే । ఏతత్సర్వమిదంతత్త్వంత్వయ్యేవప్రతితిష్ఠతి ।త్వయ్యేవలయమాయా
తితస్మాత్త్వంసకలంజగత్। త్వమేవ కారణంయస్మాత్ తస్మాత్త్వంసర్వ మేవ
హి ।ఆవిర్భావతిరోభావౌజన్మమృత్యుశ్చజీవితం। స్థూలసూక్ష్మప్రభేదేనవ్య
క్తావ్యక్తస్వరూపధృత్।గుణత్రయవిహీనస్త్వంసంయుక్తష్షడ్గుణైశ్శుభైః॥
శ్రీశాలిహోత్రః ॥ ఏవంబహువిధైస్తోత్రైఃస్తువంతఃపురుషోత్తమం ।
అర్చయామాసురవ్యగ్రా వాంఛితార్థప్రసిద్ధయే । తతఃప్రసన్నోభగవా

---

ஸகலமும் நீயே. பிரமன், ருத்திரன், இந்திரன், அக்நி, யமன், வருணன், வாயு, குபேரன், சூர்யன், சந்திரன், வசுக்கள், தக்ஷர்முதலான பிரஜாபதிகள், அங்காரகன் முதலிய கிரகங்கள், ருஷிகள், அவர்களில் உத்தமரான வால்மீகி, ஸகலமான தேவகணங்கள், திதியின்பிள்ளைகளும், தநுவின்பிள்ளைகளுமாகிய அசுரர்கள், மற்றும், ராக்ஷஸர்கள், ஆகிய இவர்களனைவருக்கும் அந்தராத்மாவாயும், மற்றும் ஸகலவிதமெகதியுமாக நீயே சாஸ்திரங்களால்சொல்லப்படுகின்றாய். காணப்படுகிற அந்தப்பிரபஞ்சம்யாவும் நீயே. இதெல்லாமும் உன்னிடத்தில் நிலைபெற்றிருக்கிறது. பிரளயத்தில்உன்னிடத்தில் தானேலயத்தை அடைகிறது.

ஆகையால் ஸகலஜகத்ஸ்வரூபியானவன் நீயே. பின்னும் இந்தஜகத்திற்குக் காரணமே நீயாகையால் கார்யமானஜகத்திற்கும், காரணமான உனக்கும் மண்ணுக்கும் குடத்திற்கும்போல் பேதமில்லாமையைப்பற்றி நீயே ஸகலமுமாகின்றாய். இந்தப்பிரபஞ்சத்தினுடைய தோற்றம், மறைவு, ஜந்மம், மரணம், பிழைத்திருத்தல் ஆகியஇவைகளும் உனக்கேஸ்வாதீநங்கள் ஸ்தூலம் சூக்ஷ்மம் என்கிற இரண்டு அவஸ்தைகளாலே வியக்தமென்றும் அவியக்தமென்றும் சொல்லப்படுகிறஅசேதநமாகிய சரீரத்தைத்தரிக்கிறவனும் நீயே. ஸத்வம்ரஜஸ் தமஸ் என்னும் முக்குணங்களில்லாதவனும், ஞானம், பலம், ஐசுவரியம், வீர்யம். தேஜஸ், சக்தி என்னும் மங்களமான ஆறுமஹாகுணங்களையுடையவனுமாகின்றாய். என்றிவ்விதமாக தேவர்கள் புருஷோத்தமனான ஸ்ரீ வீரராகவனை ஸ்துதிசெய்துக்கொண்டு தங்களிஷ்டபலசித்திக்காக பக்தியுடன் அர்ச்சித்தனர். அதனால் பிரஸன்னனான எம்பெருமான் திவ்யரூபத்துடன் சேவைசாதித்து. அந்தத்தேவர்களைநோக்கி

నభివ్యంజితవిగ్రహః । తానువాచసురాన్సర్వాన్మేఘగంభీరయాగిరా ।శ్రీ భగవాన్ । సుప్రసన్నోస్మివిబుధాఃప్రార్థయధ్వంయథేప్సితం । సర్వం వోతిప్రదాస్యామివృణీధ్వంనాత్రసంశయః । ధర్మమర్థంచకామంచకై వల్యంచయథేప్సితం । ఆపద్విమోచనంచాపిసర్వోపద్రవనాశనం। ఆయు రారోగ్యమైశ్వర్యంరిపూణాంతుక్షయంతథా । దేవాః । త్వదిచ్ఛామను వర్తంతేసర్వప్రాణిభృతోహరే । నశక్యతేత్వదన్యేనత్వదాజ్ఞామతివర్తి తుం । బ్రహ్మాద్యాస్తంబపర్యంతాఃప్రాణినోగుణచేష్టితాః । త్వద్దేహాత స్సముద్భూతాస్త్వద్దర్శితపథానుగాః। నియుక్తాస్స్వాధికారేషువర్తంతే త్వద్భయాదిహ । ఇదానీందుర్గమాఃక్రూరాఃదానవాబలదర్పితాః। య జ్ఞైస్తపోభిరత్యుగ్రైర్మఖప్రవృత్తామహాబలాః । ఆగత్యత్రిదివంయుద్ధేని ర్యాప్యాస్మానితస్తతః । భుంజతేద్యసురైస్సేవ్యందేవలోకంమహోద్యుతే ।

---

மேகமுழக்கம் போன்ற கெம்பீரமான வசனத்தை அருளிச்செய்தான். தேவர்களே உங்கள்விஷயத்தில் நான்பிரஸந்நனேன். உங்களுக்கு இஷ்டமான வரங்களைப் பிரார்த்தியுங்கள்ஸகலபலனேயும் தருகிறேன் ஸந்தேகமில்லை தர்மம்.அர்த்தம்,காமம், கைவல்லியம், உங்களிஷ்டம்போல் ஆபத்துக்களை விமோசநம் செய்தல் மற்றும் ஸகல பீடைகளையும் ஒழித்தல், ஆயுள், ஆரோக்கியம், ஐசுவரியம், சத்துரு நாசம். ஆகியஇவைகளை உங்கள் பிரார்த்தனையின்படி தருகிறேன் என்று எம்பெருமான் நியமிக்கக்கேட்டு, தேவர்களனைவரும் ஸ்ரீஹரியே! ஸகலபிராணிகளும் உனதுஇச்சையை அநுஸரிக்கின்றனர், உனதுஆஜ்ஞையை மீறிநடப்பதற்கு உன்னைக்காட்டிலும்வேறொருவராலும் சாத்தியமன்று. பிர்ம்மாதிஸ்தம்ப பர்யந்தமாக உள்ளஸகலபிராணிகளும், முக்குணங்களுக்கு வசமாக நடக்கிறவர்களனைவரும்உனது சரீரத்தினின்றும் ஆவிர்ப்பவித்து உன்னால் காட்டப்பட்ட வழியைஅநுஸரிப்பவர்களாகி தத்தம் அதிகாரத்திற்குரிய தொழில்களில் உன்னால் ஏவப்பட்டவர்களாகி உன்னிடத்தில் பயந்து நிற்கின்றனர்.

அப்படிஇருக்க இப்பொழுது மிகவும் கொடியர்களாகிக் கிட்டவொண்ணாத தசையைப்பெற்றிருக்கிற தானவர்கள்பலத்தினால்கொழுத்தவர்களாகி. மஹாமந்திரங்களால் செய்யப்படுகிறயக்ஙியங்களாலும் உக்கிரமானதபஸ்ஸினாலும் அவமதிக்க அரிதானமஹாபலத்தைப்பெற்று தேவலோகத்தில்வந்து மஹாயுத்தம் செய்து எங்களை இங்குமங்குமாகத்துரத்திவிட்டு தேவர்களால் அநுபவிக்கத்தக்கதாகிய தேவலோக போகங்களை அநுபவிக்கின்றனர். மஹாதேஜஸ்ஸோடுவிளங்

త్వమేవసర్వలోకానామిహాముత్రచరక్షకః । అనన్యగతయోనాథత్వా
మేవశరణంగతాః ॥ శ్రీశాలిహోత్రః ॥ ఇత్యుక్త్వామునయస్సర్వేప్ర
ణేముస్తత్పదాబ్జయోః । రక్షరక్షేతిబహుశోవదంతఃపురుషోత్తమం॥ శ్రీ
భగవాన్ ॥ అనుప్రవిశ్యమత్తేజోమహేంద్రమరిమర్దనం । వినిర్జిత్యాసురా
న్సర్వాన్ యుష్మానవతుసర్వదా । ఇత్యుక్త్వావృత్రహంతారంవిలోక్యపురు
షోత్తమః । విససర్జసురాన్సర్వాన్స్వాంశలేశోపబృంహితాన్ । తతః
ప్రహృష్టవదనానిర్జిత్యవిబుధద్విషః । అగ్రతోభయహీనాస్తేభుంజతేస్వ
ర్గమవ్యయం । ఏవమిష్టప్రదోవిష్ణుస్తీర్థేహృత్తాపనాశనే । అతస్తత్సదృశో
లోకేనాస్త్యభీష్టఫలప్రదః ॥ భక్త్యైతదేవకథయేచ్ఛ్రుణుయాద్యథావ

---

குகிற ஸ்ரீராகவா ! நீயே ஸமஸ்தலோகங்களையும் இஹத்திலும்,
பரத்திலும், ரக்ஷிக்கிறவனன்றோ, நாதனே வேறுகதியற்றவர்களாகி
அடியோங்களனைவரும் உன்னைச்சரணம் அடைந்தோம், அடியோங்
களை ரக்ஷிக்கவேண்டும், ரக்ஷிக்கவேண்டுமென்று இவ்விதமாக முறை
யிட்டுக்கொண்டு சகலதேவர்களும் ஸ்ரீவீரராகவனுடையபாதாரவிந்த
ங்களில் தண்டம்சமர்ப்பிக்கையில் அவர்களைக்கடாக்ஷித்து ஸ்ரீபகவான்
அருளிச்செய்தார். தேவர்களே சத்துருஸம்ஹாரத்தைச்செய்வதான
எனதுதேஜஸ்ஸானது இந்திரனிடத்து ஆவேசித்து ஸகல அசுரர்களை
யும்ஜயித்து எப்பொழுதும் உங்களை ரக்ஷிக்கக்கடவதென்று அருளிச்
செய்துபுருஷோத்தமன் இந்திரனைக்கடாக்ஷித்துத் தமது சக்தியின் ஒரு
அம்சத்தைப்பெற்று வளர்ந்தவர்களான அந்தத்தேவர்களனைவரையும்
விடைகொடுத்தனுப்பினர். பின்பு அமரர்களனைவரும் மனமகிழ்ந்துமு
கமலர்ச்சியுடன் கிளம்பி சகலசத்துருக்களையும் ஜயித்து அசுரர்களுக்
கெதிரில் ஸ்திரமாகஸ்வர்க்கத்தை அநுபவிக்கின்றனர். தேவபாகரே!
இவ்விதமாக ஸ்ரீவீரராகவன் வேண்டினபலன்களைத் தருகிறவராயும்
தீர்த்தமானது மனதில் உண்டான ஸகலதாபங்களையும் ஒழிக்கவல்ல
தாயும் கூடி இருக்கையால் அந்தவீக்ஷாரண்ணிய க்ஷேத்திரத்திற்கு
ஸமமாக அநிஷ்டங்களை யொழித்து இஷ்டங்களைத்தருவதான க்ஷே
த்திரமானது உலகத்தில்இல்லை. ஆதலால் எவன்மிகுந்த சுகத்தைப்பெ
ற்றுவாழ இச்சிக்கிறானோ அவன் பரமபுருஷனான ஸ்ரீவீரராகவனது ப
க்தஸம்ரக்ஷணத்தையும் ஹிர்த்தாபநாசந புஷ்கரிணியில் ஸ்நாநம்செய்
வதினால் வருகிறபலவிசேஷமகிமையையும் சொல்லக்கடவன், இந்த

త్వంప్రాప్తుమిచ్ఛతిసుఖంపరమస్యపుంసః । భక్తానురక్షణవిచక్షణవిక్రి
మంచహృత్తాపనాశనవిగాహనవైభవంచ ॥ ఓం ॥

ఇతిశ్రీమార్కండేయపురాణేక్షేత్రకాండే వీక్షారణ్య
క్షేత్రమాహాత్మ్యేదేవానుగ్రహకథనంనామద్వి
శతతమోధ్యాయః॥

---

## తృతీయాధ్యాయప్రారంభః.

శ్రీశాలిహోత్రః ॥ భూయశ్శ్రుణుకథాంవిష్ణోస్తత్క్రీడాంసమాగతాం । యస్యశ్రవణమాత్రేణసద్యశ్చేతఃప్రసీదతి। వీక్షారణ్యేపురాతస్మిన్కశ్చిజ్జనపదోమహాన్ । యత్రధర్మాఃప్రవర్తంతేపాపసంబంధవర్జితాః। దురాచారోనతత్రాస్తినైవహింసాననాస్తికాః । తత్రవిష్ణువదేవాసీత్క్షత్రియస్సర్వధర్మవిత్ । ధర్మసేనఇతిఖ్యాతోదిలీపనృపవంశజః । ఆసీదఖిలలోకానాంశాసితానృపసత్తమః । శశాసవసుధాంకృత్స్నాంసశైల

---

வைபவங்களைப்பக்தியுடன் கேழ்க்கக்கடவன் அவன்சகலசுகத்தையும்பெற்றுவாழ்கிறுன்.

ஸ்ரீமார்க்கண்டேய புராணத்தில் க்ஷேத்திரகாண்டத்தில் வீக்ஷாரண்யமாஹாத்மியத்தில் ஸ்ரீவீரராகவன் தேவர்களை அநுக்கிரஹித்த கதையைச்சொல்லுகிற நூற்றிரண்டாவது அத்தியாயம் முடிந்தது.

---

## மூன்ருவது அத்தியாயம்.

ஸ்ரீசாலிஹோத்திரமுனிவர் தேவபாகரைநோக்கிப்பின்னும் சொல்லுகிருர். தேவபாகரே ஸ்ரீவீரராகவன் அந்தவீக்ஷாரண்ணிய க்ஷேத்திரத்தில் செய்தருளின திவ்யலீலைகளைச்சொல்லுவதான ஒருகதையைக்கேளும். இதுஉபதேசவழியால் என்செவிக்குவந்திருக்கிறது. அதைக்கேட்டமாத்திரத்தில் உமதுமனம் மிகுந்ததெளிவையடையும். அந்தவீக்ஷாரண்ணியத்தில் பெரிதாகிய தருமஸேநபுரம்என்கிற ஒரு பட்டணம்இருந்தது. அதில் பாபஸம்பந்தமேயில்லாத தருமங்களே நடக்கின்றன. அதில்துராசாரம்கிடையாது. ஹிம்சைகிடையாது. நாஸ்திகர்களில்லை. அந்நகரத்திற்கு அரசன்திலீபமஹாராஜனுடையவம்சத்தில்பிறந்தவனும், ஸகலதருமங்களையும்அறிந்தவனும், தர்மஸேநன் என்று பிரசித்தனுமாகி விஷ்ணு தேவன்போல் சகலரையும் ரக்ஷிப்பவனுகி இருந்தான். அவன் ஸகலலோகங்களையும் சாஸநம் செய்யும் ஸார்வபௌமனுகிமலைகாடுகடல்களோடுகூடியஸகலபூமியையும்ரக்ஷி

వనకాననాం । తస్యాసీదుత్పలాభాక్షీకన్యకాతనుమధ్యమా । నామ్నా
వసుమతీభాసాలక్ష్మీరద్భుతలక్షణా । ఫుల్లపద్మాననానీలకేశినీమందగామి
నీ। సర్వచిత్తహరారూపగుణయౌవనసంపదా । తాంవిలోక్యసుతాంరా
జాసాక్షాచ్ఛ్రియమివాగతాం । కృతకృత్యమివాత్మానంమన్యమానోఽబ్ర
వీదిదం । యద్యేనాంవరయేత్కన్యామాగత్యసదృశఃపుమాన్ ।రూపయౌ
వనసంపత్త్యాతస్మైదాస్యామ్యహంధ్రువం । ఏవంలక్షణహీనస్తుబలేనా
సునయేనవా । అన్యఃకస్త్రిషులోకేషుమత్కన్యాంనేతుమర్హతి । య
ద్వాయమేషావరయేత్తస్మైదాస్యామినాన్యథా ॥ శ్రీశాలిహోత్రః ॥
యేచాన్యేపృథివీపాలాధరణ్యాంగుణవత్తరాః । తామభ్యర్థ్యాభ్యసూ
యంతేతేసర్వేహీనలేభిరే। ఏవంనిశ్చిత్యభూపాలేవర్తమానేమహాబలే।
తస్మిన్కాలేవసుమతీకన్యకాభిస్సమావృతా । పుష్పాపచయలీలార్థంయ

---

த்தான். அந்தமஹாராஜனுக்கு ஒருகன்னிகை அவதரித்து வஸுமதி என்னும் பெயரால் பிரசித்தையாகி காந்தியினால் லக்ஷ்மீதேவிபோல் இருந்தாள். அவள்கருநெய்தல் போன்றகண்களைப் பெற்றவளும்,சிற்றிடையையுடையாளும்,ஸாமுத்திரிகசாஸ்திரத்தில்சொல்லியிருக்கிற அத்புதலக்ஷணங்களையுடையவளும்,அலர்ந்தழகிய முகாரவிந்தத்தையும்,இருண்டகுழல்களையும், மந்தகமநத்தையும்பெற்று ரூபம்,குணம் யௌவநப்பருவம்,இவைகளால் ஸகலஜனங்களுடையமனதைஹரிப்பவளுமாக இருக்க, தன்கிருகத்திற்கு வந்திருக்கிற ஸ்ரீமஹாலக்ஷ்மியைப் போலிருக்கிற அந்தவசுமதியைக்கண்டுகளித்துத் தன்னைக்கிருதகிருத்தியனாகநினைத்து தருமசேனமஹாராஜன்பின்வருமாறுசொன்னான். ரூபயௌவநங்களால் இந்தப்பெண்ணுக்கேற்றவனான ஒருபுருஷன்வந்து இவளைவரித்தானாகில்நிச்சயமாய் அவனுக்குக்கொடுக்கிறேன்.இவ்விதலக்ஷணங்களில்லாதவேறுஎவன் இந்தமூவுலகத்திலும் பலாத்காரத்தினாலோ பிரியவசனங்களாலோ நமதுகன்னிகையைப் பெறத்தக்கவனிருக்கிறான். இல்லாதபக்ஷத்தில்எந்தப்புருஷனைக்கண்டும்கன்னிகை யோவரிக்கிறாளோ அவனுக்கேதருகிறேன், இதுதவறாதுஎன்றுநிச்சயித்திருக்கையில்தேவபாகரே!இந்தப்பூமியில் குணவான்களான அனேகம்அரசர்கள் இந்தக்கன்னிகையைஅபேக்ஷித்து,பெருமையால்அசூயைப்பட்டார்கள்.இவ்விதமானநிச்சயத்துடன்மஹாபலசாலியான தருமசேனமஹாராஜனிருக்கையில்,வசுமதியானவள் அனேகம் கன்னிகைகளால்சூழப்பட்டுப் புஷ்பங்களைப்பறித்து விளையாடுவதற்காகஹிர்த்தாப நாசநமென்கிற ஸரஸ்வதின்கரையைச்சே

యాచసరసస్తటం । తత్రైవన్యపుష్పాణివిచిన్వంతిచచారహ। దదర్శ పురుషంతత్రయువానమమితౌజసం॥ ప్రభామండలమధ్యస్థంస్మేరవక్త్రసరోరుహం । తస్మిన్నిపతితాంద్రుష్టిమనివర్తితుమక్షమా । వ్యతిష్ఠతతదాతత్రకృత్యాకృత్యవిమోహితా। పురుషోపిచతాంద్రుష్ట్వా రాజపుత్రీంయశస్వినీం ।ప్రహృష్టస్తాముపాగమ్యపరిణేతుంమనోదధే। తత్పార్శ్వస్థాం ప్రతీహారీంరక్షిణీంలక్ష్యవిక్రమాం । సహాయుధాంసపప్రచ్ఛకన్యాంకస్యేతిసాదరం । తస్యసందర్శనాదేవపూర్ణోరాజ్ఞోమనోరథః । ఇతినిశ్చిత్యసహసాప్రత్యువాచయథాతథం । చింతయామాససాకన్యాతదానందవిమోహితా । పతిరేషమమైవాస్తుసర్వసౌందర్యసంచయః । దేవోవామానుషోవాపిమమభర్తాభవేదయం । అద్యమేసఫలంజన్మవరో

---

ன்று அங்குள்ள வனத்திலுண்டாகிய உத்தமபுஷ்பங்களைக்கொய்து கொண்டு சஞ்சரிக்கையில் நிகரற்றதிவ்யகாந்தியைப்பெற்று,சரீரத்தினின்றும்பரவுகின்ற பேரொளிக் கூட்டத்தின்நடுவில் பிரகாசிக்கிறவனும்,அலர்ந்தழகிய முகாரவிந்தத்தையுடையவனுமாகிய ஒரு யௌவநபுருஷனை அவ்விடத்திற்கண்டுவசுமதியானவள்அவனிடத்தில்வைத்தகண்களை வாங்கிக்கொள்ளுவதற்குவல்லமையில்லாதவளாகிசித்திரத்தில்எழுதியபிரதிமைபோல்நின்றாள். அந்தப்புருஷனும்,ரூபகுணங்களால்பெரும்புகழ்பெற்றவளாகியராஜகுமாரத்தியைநன்றாகக்கடாக்ஷித்துதாம் திருவெவ்வுளில் ஆவிர்ப்பவித்ததைக்கண்டுதமக்காகவசுமதியாக அவதரித்துவந்த லக்ஷ்மீயென்றறிந்து மனமகிழ்ந்துஇவளைப்பெறுவதற்காக வன்றோ அலைகடலைக் கடைந்தோம். அக்கடலைப் பெருமலைகளால் கட்டினேம். அவளேநம்மைத் தேடிவருகையில் விடுவோமோ என்று நெருங்கிவந்து அவளைத்திருமணம் புரியக் கருதினான்.பின்பு அவளுடைய அருகில் அவளைரக்ஷித்துக்கொண்டு கையுமாயுதமுமாய் நிற்கிறவளும், மிகுந்தவலிமையைத் தோற்றுவிக்கிற வேஷத்தையுடையவளுமாக இருக்கிறவாசல் காப்பவளைப்பார்த்து அந்தமஹா புருஷன் இவள்யாருடையகன்னிகை என்று ஆதரவுடன்வினவினான். அப்பொழுதே அந்தக்காவற்காரிஅந்தச்சுந்தர புருஷனைக் கண்டவுடனே நம்மரசனுடைய எண்ணம் பரிபூர்ணமாயிற்றென்றுநிச்சயித்து சீக்கிரமாக உள்ளபடியேபதில் சொன்னாள். அப்பொழுது அந்த வசுமதி என்னுங்கன்னிகையும் அந்தமஹா புருஷனைக்கண்ட ஆநந்தத்தினால் மோஹித்தவளாகிப் பின்வருமாறுசிந்தித்தாள்.ஸகல ஸௌந்தர்ய ராசியாகியஇந்தப் புருஷன்எனக்கேபதியாகக் கடவன். இவன் தேவனாகிலும் மனிதனாகிலும் ஆகட்டும்,எனக்கு இவனேபதியாகவேண்டும், இந்தமஹாபுருஷன்எனக்குமணவாளனாகில் இப்பொழுதே எனதுஜன்மம்பயன்பெற்றது. இந்தச்சுந்தரன் என்னைப்பிரார்

యదిభవేదయం । దైవేనానుగృహీతాస్మియదిమాంప్రార్థయేదయం।
నచాస్యసదృశోలోకేమమచిత్తహరఃప్రియః । స్వానురూప్యేణవరయే
ద్యదిమామద్యసాంప్రతం । తదాహంకృతకృత్యాస్మిపితాకచ్ఛిత్ప్రసీదతి।
యదివామమసౌందర్యముగ్ధోమాముపనేష్యతి । తదామేసఫలఃకామో
యదిభర్తాభవేదయం । ఇతిసంచింతయంతీంతామాససాదసమీపతః।
సబాలస్మితవక్త్రాబ్జస్తాంకన్యాంచవిమోహయన్ । తామువాచసతే
జస్వీవివశాంకామమోహితాం ॥ రాజపురుషః ॥ కాత్వంకమలపత్రా
క్షికన్యకాభిస్సమావృతా । కఃపితాకోనువాదేశోజననీకావదస్వతే॥
కన్యకా ॥ అహంవసుమతీనామధర్మసేనఃపితానృపః । జననీగౌతమీదేవీ
దేశోయంకన్యకాప్యహం। మత్పితాసద్వరాన్వేషీసదృశోనోపలభ్యతే॥
రాజపురుషః ॥ అహంరాజసుతఃకశ్చిన్మమసర్వమిదంజగత్ । చరామి

---

த்திதானாகில்தெய்வத்தினால்அநுக்கிரகிக்கப்பட்டவளாகிறேன். நா
ன்பார்த்தராஜ குமாரர்களில்ரூபத்தினால்என்மனதைவசப்படுத்துகிற
பிரியன் இவனுக்குச்சரியாகமற்றொருவனுமிவ்வுலகத்திலில்லை.ரூபம்
குணம், முதலியவைகளாலேதனக்கு ஏற்றவளாயிருக்கையைப்பற்றி
என்னை இப்பொழுதே அபேக்ஷித்தானாகில்தகுதியாம்.அதற்கு என்
பிதாவும் இணங்குவாராகில்அப்பொழுதுநான்சகலத்தையும் செய்து
முடித்தவளாகிறேன். இந்தப்புருஷன் எனதுஸௌந்தர்யத்தில்மோ
ஹித்தவனாகிஎன்னைத்திருமணம் செய்வானாஇவனேஎனக்குபர்த்தா
வாகில்அப்பொழுதுஎன்இச்சைப்பயன்பெற்றதாகும்.என்றிவ்விதமா
கச்சிந்திக்கையிலஅந்தராஜ குமாரன் அந்தக்கன்னிகையின்சமீபத்தில்
வந்து மலர்ந்தமுகாரவிந்தத்தில்புன்னகைசெய்துக்கொண்டுகாமமோ
ஹத்தைப்பெற்றிருக்கிற அந்தக்கன்னிகையைப்பின்னும்அதிகமாகம
யக்கிக்கொண்டு மிகுந்ததேஜஸ்ஸையுடைய வனாகி அந்தவசுமதியை
நோக்கிச்சொல்லுகிறான்.தாமரைமலரினிதழ்போன்றகண்களையுடை
யபெண்ணேநீயார்? வெகுபெண்களால் சூழப்பட்டிருக்கிறாய். உன்
பிதாயார்? உன்தேசம் எது?உன்தாய்யார் இவைகளைச்சொல்லென்
றுவினவ கன்னிகைசொன்னாள். ஓய் புருஷோத்தமனே!யான்வசுமதி
என்னும் பெயர்பெற்றவள். தர்மஸேநமஹாராஜன்என்பிதா.கௌத
மீதேவிஎனதுதாய். தேசம்இதுதான்.யானகன்னிகை. என்பிதாஎன
க்கு நல்லவரனைத்தேடுகிறார்.வடிவழகுமுதலியகுணங்களால் எனக்கு
ஏற்றவனாகியவரன் இதுவரையில் கிடைக்கஇல்லை. என்றிந்த வசநத்
தைச்சொல்லக்கேட்டு ராஜபுருஷன் பெண்ணே!நான்ஒரு ராஜகுமார
ன். இவ்வுலகம்யாவும் எனதுதேசமே. எனக்கேற்றவளாகிய கன்னி
கையைத்தேடிக்கொண்டு யானுமிந்தப்பூமி எங்கும் சஞ்சரிக்கிறேன்

వసుధాంకృత్స్నాంకన్యకాన్వేషణోన్ముఖః ॥ వసుమతీ ॥ రాజపుత్రత్వ
యాసమ్యక్ప్రార్థనీయః పితామమ । తవసందర్శనాదేవసర్వందా
స్యత్యసంశయః॥ ఉపాయంతత్రవక్ష్యామిరాజపుత్రనిరత్యయం । మయి
తేయదివాంఛాస్యాత్తత్కురుష్వచమాచిరం। అత్రశేతేజగన్నాథస్సర్వా
భీష్టఫలప్రదః । మధుకైటభయోర్హంతా సర్వలోకాభయప్రదః । అము
మారాధ్యవిబుధామనుష్యాద్యానృపాత్మజ । పూర్తికామాశ్చబహవః
కృతకృత్యాభవంతిహి। ఆరాధయస్త్వంచైనమిష్టసిద్ధిర్భవిష్యతి । ఇ
త్యుక్తస్తాంరాజపుత్రస్స్మితపూర్వమభాషత। అభీష్టఫలదంవిద్ధిసర్వేషాం
చవరాననే । ఫలార్థంవాపరార్థంవానాన్యంకంచిదుపాశ్రయే । మమ
పాణిగ్రహేవాంఛాయదితేస్తిశుభాననే। ఏతేనచాప్యుపాయేనప్రత్యూ
హోనభవిష్యతి । ఏతచ్ఛ్రుత్వాతుసాకన్యాయథేప్సితమనోరథా ।

---

என்று சொலலக்கேட்டு வசுமதியானவள். ராஜகுமாரனே! அப்படி
யாகில் என்பிதா உம்மால் நன்றாகப்பிரார்த்திக்கத்தக்கவர். உம்மைத்த
ர்சித்தஉடனே என்னையும் கொடுத்துமற்றும்ஸகலத்தையுந்தருவார்.
ஸந்தேகமில்லை. அதுவிஷயத்தில் பலனைச்சாதித்துத் தருவதாகியஒரு
உபாயத்தைச்சொல்லுகிறேன். என்னிடத்தில் உமக்கு ஆசையிருக்கு
மாகில் அந்தஉபாயத்தைநீர்ச்செய்யவேண்டும். தாமதிக்கவேண்டாம்,
இந்தவீக்ஷாரண்ணியத்தில் மதுகைடபர்களென்னும் அசுரர்களையொ
ழித்துரக்ஷிக்கிறேன்என்று ஸகலலோகங்களுக்கும் அபயங்கொடுத்து
ஸகலாபீஷ்டங்களையும் தருகிறவராகி ஜகதீசுவரனான ஸ்ரீவீரராகவன்
இந்தத்தாமரைப்பொய்கையின்வடகரையில் சயனித்திருக்கிறார். ராஜ
குமாரா! இவரைஆராதித்து, தேவர்களும், மனிதர்முதலானமற்றும
ஸகலரும் பூர்ணமாக இஷ்டபலன்களைப்பெற்றுகிருதகிருத்தியர்களா
கின்றனர். நீரும் இந்தப்பெருமாளை ஆராதியும், உம்முடைய இஷ்டங்
கள் சித்திக்கும். என்று சொல்லுகையில் அந்தராஜகுமாரன் புன்ன
கைசெய்து சொல்லுகிறான். அழகிய முகத்தையுடைய பெண்ணே!
சகலருக்கும் அபீஷ்டபலன்களைத் தருகிறவனாக என்னைத் தெரிந்து
கொள்ளக்கடவாய். எனக்கு இஹபரசுகங்களைப்பற்றியாவது என்னை
அடுத்திருக்கிற மற்றொருவனைப்பற்றியாவதுயான்மற்றொருவனை அடு
த்திருப்பதில்லை. சுமுகியே!என்னைமணம் செய்வதில் உனக்குஇச்சை
இருக்குமாகில் அதற்கு உங்கள்குலதெய்வமாக இருக்கிற இந்தஸ்ரீவீ
ரராகவனாலேயே ஒருதடையும் உண்டாகாது. அவரே அதற்கு உபா
யமாக இருப்பவர்என்றுசொல்ல அதைக்கேட்ட அந்தக்கன்னிகையா
னவள்தனதுவிருப்பம் நிறைவேறப்பெற்றவளாகிஸத்குணநிதியாகியி
ருக்கிற, அந்தராஜகுமாரனிடத்தில் விவாகநிச்சயத்தைப்பெற்றுஇதை

తస్మిన్సిద్ధిమనుప్రాప్య వ్యాదిదేశపితుస్స్వయం । వచోనిశమ్యకన్యాయా
ధర్మసేనఃపితాతతః । బ్రాహ్మణైర్మంత్రిభిస్సార్ధం రాజపుత్రముపాగమ
త్ । రాజపుత్రంతుతందృష్ట్వారూపయౌవనసంపదా । కృతకృత్యమివా
త్మానంమన్యమానోఽబ్రవీదిదం ॥ రాజా ॥ ఆశ్రిత స్త్వమిమం దేశంశోభ
యస్యాభయాస్వయా। కస్యపుత్రోఽసికథయకిమర్థంత్వమిహాగతః। బ్రా
హ్మణఃక్షత్రియోవాపిదేవోవాజన్మతస్స్వయం। సదృశోమత్సుతాయా
శ్చఇతిమేనిశ్చితామతిః । హితాహితేచమనసఃప్రవృత్తిఃకథయత్యసౌ ।
త్వద్దర్శనాద్ధిమనసఃప్రసాదోభవతిధ్రువం॥ శాలిహోత్రః ॥ ఇత్యుక్త్వా
మంత్రిభిస్సార్థంమంత్రవిద్భిర్ద్విజోత్తమైః । ఆలోడ్యతత్ప్రదానేచవ్యవ
సాయంచకారసః ॥ రాజపుత్రః ॥ అహమత్రశ్రియాసార్ధంనివసామ్య
తసర్వదా । అనేనైవశయానేనతదర్థంవిష్ణునాశపే । సంప్రహృష్టమ

---

த்தன் புதாவுக்குத்தானே ஒருபுருஷனால் அறிவித்தனள். அதைக்கே
ட்டு, பிதாவான தருமஸேனமஹாராஜன், புரோஹிதன், ஆசாரியன் இ
வர்கள் முதலானபிராம்மணர்கள் மந்திரிகள் இவர்களோடு அந்தராஜ
குமாரனை அடைந்து திவ்வியரூபயௌவனங்களால் நிறைந்த அந்தரா
ஜகுமாரனைக்கண்டு சக்கிரவர்த்தித்திருமகனைக்கண்ட ஸ்ரீஜநகமஹாரா
ஜன்போல் மனமகிழ்ந்துத் தன்மனோரதம் பூர்த்தியானதாக நிச்சயித்
துக்கொண்டு அவனைநோக்கிப் பின்வருமாறு சொன்னான். ராஜகுமா
ரா! நீர் உமதுதிவ்யதேஜஸ்வினால் இந்தத்தேசத்தை அலங்கரித்துக்
கொண்டு வந்தீர். நீர்யாருடைய குமாரன். இங்கு எதற்காகவந்தீர்
இவைகளைச்சொல்ல வேண்டும். நீர்ஜன்மத்தினால் பிராம்மணனா, க்ஷத்
திரியனா, அல்லதுஸ்வயம் தேவதையா, எனதுகன்னிகைக்குஏற்றபுரு
ஷனாக வந்தீர்என்று எனக்கு நிச்சயமான புத்திஉண்டாயிற்று. உமது
விஷயத்தில் ஹிதமாகி இருக்கிறஎன்மனதானது உமது பிரயத்தினத்
தையும் சுபமாகவேதோற்றுவிக்கிறது. உம்மைத்தரிசித்தனால் என்
மனது மிகவுந்தெளிந்தது என்றுசொல்லி தேவபாகரே! அந்த அர
சன் மந்திரிகளோடும், மந்திரங்களை அறிந்தபிராம்மண சிரேஷ்டர்க
ளோடும் ஆலோசித்துத்தன் கன்னிகையைத் தானம்செய்வதில் முய
ற்சி உள்ளவனானான். அந்தத்தருணத்தில் அந்தராஜகுமாரன். மஹாரா
ஜனே நமதுஊரும், பெயரும். தந்தையும், தாயும், மற்றும் ஸகல
மும் சொல்லிமுடியாது, முக்கியமாகச்சொல்லுவதைக்கேளும், யா
னிவ்விடத்தில்தானே ஸ்ரீ மஹாலக்ஷ்மிபோன்ற உம்முடைய கன்னி
கையோடும், எனதுசெல்வத்தோடும், எக்காலத்திலும் வசிக்கிறேன்
அதற்காக இதோசேஷசயனத்தில் திருக்கண்வளர்ந்தருளுகிற ஸ்ரீ
வீரராகவன் முன்னிலையில் சபதமிடுகிறேன். நீர்எவ்விடத்திற்குச்செ
ல்லுவேனோவென்று அஞ்சவேண்டாம், என்றுசொல்லக்கேட்டு அந்த

నాస్తేనధర్మసేనః పరంతపః ।దదౌవసుమతీంతత్రరాజపుత్రాయకామినీం।
తస్మైదదౌతయాసార్ధంధనధాన్యమనేకశః । పశుహస్తిగృహారామక్షే
త్రందాసగణానపి।గృహీత్వాతత్కరాంభోజంస్వకరాంభోరుహేణచ।
అనంతశయనేతస్మిన్నారురోహతయాసహ। తంద్రుష్ట్వాప్రాణినస్సర్వే
ననృతుస్తుష్టమానసాః ।నృపతిస్తత్ప్రసాదేనపరాంసిద్ధిముపాగమత్। పు
ణ్యావర్తస్యమాహాత్మ్యంకథితంతవసువ్రత । అరణ్యస్యచతీర్థస్యకింభూ
యఃకథయామితే । మధుమథననికేతనేనివాసోనిధనజనిస్థితిదుఃఖనాశహే
తుః। ఇతిదృఢమతిరాత్మనోనివాసంస్వయమపితత్రచకారదేవభాగః॥
ఇతిశ్రీమార్కండేయపురాణే క్షేత్రకాండే వీక్షారణ్యమాహాత్మ్యే
శ్రీవీరరాఘవకృత వసుమతీవివాహ కథనంనామత్రిశతతమోధ్యాయః.

---

த்தருமஸேநமஹாராஜன மனதில அடங்காத ஆநந்ததைதப் பெற்ற
வனுகி அந்த வீக்ஷாரண்ணியக்ஷேத்திரத்தில் கல்யாணப்பந்தலி
ட்டு அந்தராஜகுமாரனிடத்தில அன்புள்ளவளாயிருக்கிற வசுமதி எ
ன்னும் தனதுகன்னிகையை அந்தராஜகுமாரனுக்கேதாநம்செய்து
அந்தக்கன்னிகையுடன், தநம், தாந்யம், பசு, கஜம், கிருஹம், ஆராமம்,
க்ஷேத்ரம், தாஸர்கள், இவைகளைக்கணக்கில்லாதபடி வெகுவாகச்ச
மர்ப்பித்தான். அப்பொழுது அந்தராஜகுமாரன் வசுமதிதேவியின்
தாமரைமலர்போன்ற திருக்கையைத் தனதுபாணிபத்மத்தினுல கிர
ஹித்துக்கொண்டு ஸ்ரீவீரராகவன் திருமுன்பேசென்று, சகலமானபி
ரஜைகளும் பார்த்துக்கொண்டிருக்கையில் அந்தவசுமதிதேவியோடு
கூடி அந்த ஸ்ரீசேஷசயநத்தில்ஆரோஹணித்தார். அப்பொழுது அந்
தமணவாளப்பிள்ளையை ஸ்ரீவீரராகவனுகவும், அந்தவசுமதியைப் பெ
ரிய பிராட்டியாகவும் சேவித்து ஸகலரும்மனதில் பேராநந்தமுடை
யார்களாய் கூத்தாடினார்கள். அந்தத்தருமஸேநமஹாராஜனும் ஸ்ரீவீ
ரராகவனுடைய திவ்யாநுக்கிரஹத்தினுல்மேலானசித்தியை அடைந்
தான். தேவபாகமுனிவரே! புண்ணியாவர்த்த க்ஷேத்ரமாஹாத்மியமு
ம்வீக்ஷாரண்ய மென்கிறவநத்தின் மகிமையும், ஹிர்த்தாப நாசநதீர்
த்தமகிமையும் உனக்குச்சொன்னேன். இனிஎன் சொல்லவேண்டு
மென்று ஸ்ரீசாலிஹோத்ர முநீந்திரர் அருளிச்செய்தார். இவ்விதமாக
க்கேழ்விசெய்த தேவபாகமுனிவர் திருவெவ்வுட்கிடந்தான் ஸந்நிதி
யில் செய்கிறவாஸமானது ஜநநமரணதுக்கங்களைஒழிக்கக் காரணமா
குமென்று நிச்சயித்துத் தானும்திருவெவ்வுளில் வசிக்க இச்சித்தார்.

ஸ்ரீ மார்க்கண்டேயபுராணத்தில் க்ஷேத்திரகாண்டத்தில் வீக்ஷா
ரண்ய க்ஷேத்ரமாஹாத்மியத்தில் ஸ்ரீவீரராகவன் வஸுமதியை விவா
ஹம்செய்தருளின திவ்யகதையைச் சொல்லுகிற நூற்று மூன்ருவது
அத்தியாயம் முடிந்தது.

## చతుర్థాధ్యాయప్రారంభః.

ఓం ॥ మార్కండేయః ॥ సకాశేశాలిహోత్రస్యదేవభాగోమహామునిః । పరిపప్రచ్ఛయాన్ప్రాయఃప్రశ్నాంస్తాన్కథయామి తే॥ దేవభాగః ॥ కథంతత్రార్చితోవిష్ణుఃపురాతైఃపరమర్షిభిః । సనత్కుమారాదిభిశ్చబ్రహ్మణాచమహాత్మనా। అథకేనప్రకారేణకింతపోభిఃకిమధ్వరైః। యథావచ్చయథాకాలంసర్వమాచక్ష్వమేమునే॥ శ్రీశాలిహోత్రః॥ గుహ్యంచాత్రత్వయాపృష్టంప్రశ్నంహిమునిసత్తమ । ఋతేదేవప్రసాదాద్వక్తుమేవనశక్యతే । పురాసర్వేశ్వరస్సర్వాల్లోకానాంహితకామ్యయా । ప్రణష్టేమోక్షధర్మేతుభూత్వాసర్వేశ్వరోహరిః । అవతీర్ణోజగత్యర్థంపూర్వంధర్మసుతావృషీ। నరనారాయణౌదేవౌతపస్తేపతురవ్యయా । ధర్మసంస్థాపనార్థాయపుణ్యేబదరికాశ్రమే । నారదాయ

---

## நான்காம் அத்தியாயம்.

ஸ்ரீமார்க்கண்டேயமுனிவர் ஸஹஸ்ராநீகமஹாராஜனை நோக்கிச்சொல்லுகின்றார். ஓய்அரசனே!தேவபாகர்ஸ்ரீசாலிஹோத்திரமுனிவரைநோக்கிப்பின்னும்எந்தஎந்தபிரச்நங்களைச்செய்தாரோ அவைகளைஉமக்குச்சொல்லுகிறேன் கேட்பீராக. இவ்விதமாக அருளிச்செய்த ஸ்ரீசாலிஹோத்திரமுனிவரைநோக்கி தேவபாகர் வினவுகிறார். முனிவரே! அந்தவீக்ஷாரண்ணிய க்ஷேத்திரத்தில் முற்காலத்தில் ஸ்ரீவீரராகவன் பரமரிஷிகளாலும், ஸநத்குமாரர்முதலானவர்களாலும் மஹாத்மாவானபிரம்ம தேவனாலும், எப்படிஆராதிக்கப்பட்டாரோ? பின்னும் எந்தவகையால் எவ்வித தபஸஹினால அல்லது எவ்விதயாகங்களால் ஆராதிக்கப்பட்டாரோ ? அதையும் அந்தக்காலத்தையும், உண்மையாக அடியேனுக்கு அருளிச்செய்ய வேண்டுமென்று பிரார்த்திக்க ஸ்ரீசாலிஹோத்திரமுனிவர் பின்வருமாறுஅருளிச்செய்தார். தேவபாக முநீந்திரரே ? நீர்வினவினவிஷயமானது பரமரஹஸ்யமானது. இது எம்பெருமானுடைய அநுக்கிரஹமின்றி என்னால் சொல்லமுடியாது, முற்காலத்தில் ஸர்வேசுவரனான ஸ்ரீமந்நாராயணன் ஸகலலோகங்களுக்கும் ஹிதம்செய்யத் திருவுளங்கொண்டு மோக்ஷதருமம் முழுதும இவ்வுலகத்தில் உபதேசிக்கிறவர்களில்லாமல் நஷ்டமானவளவில் தமது பரமாத்மஸ்வபாவத்தைவிடாதவனாகவே தருமனுடைய குமாரர்களான நரநாராயண ரிஷிகளாக அவதரித்தருளித் தருமங்களைத்தாங்கள் அநுஷ்டித்துக்காட்டி அவ்வழியாலே உலகத்தாரை உய்விப்பதற்காக, புண்ணிய க்ஷேத்திரமானபதரிகாச்சிரமத்தில் மஹாதபஸ்ஸைச் செய்கையில் அங்குவந்துஉபாஸித்தநாரதபகவானுக்கு எம்பெருமானே நீர்வினவின இந்த

పురాప్రహ్వయాపృష్టంహరిస్స్వయం । నారదోభగవాంస్తస్మాద
ధీత్యసమహామునిః । మయాచాభ్యర్థితస్తత్రదేవర్షి ర్నారదస్తదా । స
మహ్యంభగవాన్ ప్రాదాత్ గుహ్యంసాత్వతసంహితాం । తత్ప్రసాదో
పలబ్ధేనవిధినాహంసమర్చయే । దేవదేవంజగన్నాథంయథావిధినిమంత్రి
తః। తదద్యతవదాస్యామిశాస్త్రంగుహ్యంసనాతనం । సాత్వతోక్తప్రకా
రేణబ్రహ్మాద్యామునిసత్తమ । ఆరాధ్యవిధివద్విష్ణుంతత్రజగ్ముఃపరంపదం।
త్వమద్యమునిశార్దూలస్నాత్వాహృత్తాపనాశనే। ధ్యాత్వానారాయణం
దేవంస్నానకాలేద్విజోత్తమ। యథోక్తవిధినాస్నాత్వాతస్మిన్ సరసితా
పస । దేవానృషీంశ్చసర్వత్రకృత్వాచపితృతర్పణం । సూర్యమండల
మధ్యస్థంశంఖచక్రగదాధరం। కోటిసూర్యప్రతీకాశంహృదయస్థంవిచిం
త్యచ । చిత్తస్థంమానసైర్భావైః యజస్వచయథావిధి । ఆవాహనాస
నంపాద్యమర్ఘ్యమాచమనీయకం । కృత్వాతుదేవదేవాయవిష్ణవేముక్తి

---

மஹாரஹஸ்யத்தை ஸ்ரீ பஞ்சராத்திர ஸம்ஹிதையாலே உபதேசி
த்தார். அந்தநாரதபகவான் ரஹஸ்யமான விஷயங்களைத் தெளிவிக்
கிறதாகிய ஸ்ரீ பஞ்சராத்திர சாஸ்திரத்தை நாராயண முனிவரிடத்
தில் நன்றாக ஓதியபின் அந்தப்பதரிகாச்சிரமத்தில் அடியேன் செய்
தபிரார்த்தனைக்கு இரங்கிமஹாரஹஸ்யமான அந்த ஸ்ரீ ஸாத்வதஸ
ம்ஹிதையை உபதேசித்தார். அந்தநாரத பகவானுடைய அநுக்
கிரஹத்தினால் கிடைத்தஸாத்துவதஸம் ஹிதையின் விதியினால் தேவ
தேவனாய், ஸர்வலோகேசுவரனா யிருக்கிற ஸ்ரீ வீரராகவனை ஆராதிக்
கிறேன். அநாதியாயும் மஹாரஹஸ்யமாயு மிருக்கிறஅந்தப் பஞ்ச
ராத்திர சாஸ்திரத்தை இதோஉமக்கு உபதேசிக்கிறேன், பிர்ம்மாதிக
ளும் மற்றும் முனிவர்களும் அந்தக்ஷேத்திரத்தில் ஸ்ரீ பஞ்சராத்திர
சாஸ்திரத்தில் சொல்லியவிதியின்படியே ஸ்ரீ வீரராகவனை ஆராதித்
துப்பரமபதத்தைப் பெற்றார்கள். ஆகையால் தேவபாகரே நீரும் இ
ப்பொழுது ஹிர்த்தாபநாசந தீர்த்தத்தில் நீராடி ஸ்நாநகாலத்தில்
ஸ்ரீ மந்நாராயணனைத் தியானித்து ஸ்நாநம்செய்து ஸ்நாநத்திற்கு
அங்கமாகத் தேவரிஷிபிதிர்க்களை அந்தத்தீர்த்தத்தில் தர்ப்பணம்
செய்து, சூரியமண்டலத்தின் நடுவில் சங்க சக்கிரகதாபாணியாய்
கோடிசூரியர்களை நிகராகப்பெற்றவனாகி எழுந் தருளியிருக்கிற ஸ்ரீ
மந்நாராயணனை உம்முடைய ஹிருதயத்தில் தியானித்து மாநஸிகங்
களான் ரத்தினசிம்மாஸநம் முதலான ஸகலஉபசாரங்களாலும் வி
திப்படி ஆராதியும். தேவதேவனாய், நித்தியசூரிகளுக்குப் பிரபுவாய்,
ஆச்சிருத ஸம்ரக்ஷணத்திற்காகஎங்கும்வியாபித்து நிற்பவனுமாய்,மு
க்திஹேதுவாகியிருக்கிற அந்த அந்தர்யாமிக்கு, ஆவாஹநம், ஆஸ

హేతవే । స్వాత్మానంచకళత్రంచగృహంక్షేత్రంధనాగమం । యద
స్తితవయోగీంద్రసర్వంతత్పాదయోర్న్యసేత్ । సాత్వతోక్తప్రకారేణ
సమర్చ్యపురుషోత్తమం । శేషపర్యంకశయనేయత్రశేతేహరిస్స్వ
యం । తత్రనత్వాజగన్నాథమష్టాంగపతనైస్సహ।ప్రణమ్యదండవద్భూ
మౌమంత్రవిత్సుసమాహితః । వ్యక్తంసమర్చయేద్దేవంవ్యక్తైర్ద్రవ్యై
స్సుశోభనైః। యథాశక్త్యుపలబ్ధైశ్చపూజయేద్భక్తితోన్వహం । తత్ప్ర
సాదాత్పరాంశాంతింస్థానంప్రాప్స్యతిశాశ్వతం।సనందనాద్యామునయో
వసిష్ఠప్రముఖాస్తథా ।ఇంద్రాదిదేవతాస్సర్వేగంధర్వాప్సరసాదయః।
సూర్యవంశసముద్భూతారాజానోబహవోత్రవై । సోమవంశసము
ద్భూతాభూపాలామునిసత్తమ । రాజానోజనకాద్యాశ్చయోగినోముని

---

நம், பாத்தியம், அர்க்கியம், ஆசமநீயம், இவைகளை ஸமர்ப்பித்து, ஆ
த்மா, களத்திரம், கிருஹம்,க்ஷேத்திரம்மற்றும் உமக்கென்று இருக்
கிறஸகலவஸ்துக்களிலும், உமது ஸம்பந்தத்தை அறுத்து அவைகளை
யெல்லாம்,ஸர்வ சேஷியான எம்பெருமானுக்கே உரியவையென்கிற
எண்ணத்துடன் அவனதுபாதாரவிந்தங்களில்ஸமர்ப்பிக்கக்கடவீர்.பு
ருஷோத்தமனை ஸாத்துவதஸம்ஹிதையில் சொல்லியவிதியினால்* ஆ
ராதிக்கக்கடவீர். பின்பு எவ்விடத்தில் திருவனந்தாழ்வானாகிற திவ்ய
சயனத்தில் ஸ்ரீமந்நாராயணன் லோகஸம்ரக்ஷணத்திற்காகத் தாமே
எழுந்தருளிச் சயனித்திருக்கிறாரோ அவ்விடத்திற்சென்று ஜகதீசுவர
னான அந்தவீரராகவனை அஷ்டாங்க நமஸ்காரங்களோடு வாயினால்
அஷ்டாக்ஷர மஹாமந்திரத்தைச் சொல்லிக்கொண்டு பூமியில் தண்
டம்ஸமர்ப்பித்து மனத்தைஎம்பெருமானிடத்தில் நிலைபெறச்செய்து
அர்ச்சாவதாரமாய், சங்கசக்கிர கதாபாணியாய், பிரத்யக்ஷரூபியா
யிருக்கிற ஸ்ரீவீரராகவனை மங்களகரங்களாயும், சாஸ்திரங்களால் வி
திக்கப்பட்டவைகளாயுமிருக்கிற பூஜாதிரவ்வியங்களில் தனக்கு இய
ன்ற அளவாகக்கிடைத்த வெளிப்படையான அர்க்கியம், பாத்யம்,
ஆசமநீயம், சந்தநம், புஷ்பம், தூபம், தீபம, ஹவிஸ், முதலியவை
களைக்கொண்டு பிரதிதினமும், பக்தியுடன் ஆராதிக்கவேண்டும். அ
ந்தத்திருவெவ்வுட்கிடந்தானுடைய அநுக்கிரஹத்தினால் ஸகலஸம்
ஸாரதுக்கங்களையும் ஒழித்து அழிவற்ற இடமாகிய பரமபதத்தை அ
டைவீர் ஸநந்தநரும், வசிஷ்டரும், மற்றும்அனேகம் முனிவர்களும்
யோகிகளும, இந்திராதிதேவர்களும் கந்தருவரும், அப்ஸரஸ்த்ரீகளு
ம், சூரியவம்சத்து அரசர்களும்,சந்திரவம்சத்து அசர்களும், ஜனக
மஹாராஜன்முதலிய யொகிகளான ராஜரிஷிகளும்,தங்கள்தங்கள் சக்
திககு ஏற்றபடியே இந்தவீக்ஷாரண்ணியக்ஷேத்திரத்தில்ஸகலஇஷ்ட

సత్తమ । యథార్హం పూజితస్తైస్తు దేవదేవో జగత్పతిః। సర్వేషాం వాంఛితం దాతా హ్యభీష్టఫలదో హరిః। తమభ్యర్చ్య యథా న్యాయం మోక్షం ప్రాప్స్యసి శాశ్వతం॥

ఇతి శ్రీమార్కండేయపురాణే క్షేత్రకాండే వీక్షారణ్య
క్షేత్రమాహాత్మ్యే భగవదారాధనవిధి కథనం నామ
చతుశ్శతతమోధ్యాయః.

## పంచమాధ్యాయ ప్రారంభః.

శ్లో॥ దేవభాగః ॥ భూయస్తీర్థస్యమాహాత్మ్యం శ్రోతుమిచ్ఛామ్యహం మునే । నతృప్తి రస్తి మే హ్యపి కథాం పుణ్యాం హి శృణ్వతః ॥ శాలిహోత్రః ॥ పురాకృతయుగే విప్రకశ్చిదాసీద్ద్విజోత్తమః । ప్రఖ్యాతః

---

பலன்களையும் தந்தருளுகிறவராகிய ஸ்ரீ வீரராகவனை ஆராதித்தனர் பிர்ம்மாதிதேவர்களாலும் உபாசிக்கப்படுகிறதேவனையும், சராசரரூபங்களான அகிலாண்டகோடிகளுக்கு மிறைவனையும், பிரளயத்தில் பிர்ம்மாதிகளான ஸகலதேவர்களையும் அழித்துத்தன்வயிற்றில்வைத்து ரக்ஷிக்கிற ஜகத்காரணவஸ்துவாயு மிருக்கிற ஸ்ரீ வீரராகவன் எல்லார்க்கும்எளியனாய் சகலருக்கும் ஸகலவித அபீஷ்டங்களையும் தருகிறார், அவரை ஸ்ரீ பஞ்சராத்திரசாஸ்திர முறைதவறாமல் ஆராதித்துநீர்முக்தியை அடைவீர் என்று ஸ்ரீ சாலிஹோத்திரமுனிவர் தேவபாகருக்கு நியமித்தார்.

ஸ்ரீமார்க்கண்டேய புராணத்தில் க்ஷேத்திரகாண்டத்தில் வீக்ஷாரண்ணிய க்ஷேத்திரமாஹாத்மியத்தில் எம்பெருமானுடைய திருவாராதன விதியைச்சொல்லுகிற நூற்றுநான்காம் அத்தியாயம் முற்றிற்று.

## ஐந்தாவது அத்தியாயம்.

தேவபாக முனிவர்சாலிஹோத்திர முனிவரைவணங்கி சுவாமி! தேவரீர் அருளிச்செய்த புண்ணியகதையைக்கேட்கிற எனக்கு இன்னமும் திருப்திஉண்டாகஇல்லை. பின்னும் அந்த ஹிர்த்தாபநாசந புஷ்கரிணியின்மகிமையைக்கேட்கஇச்சிக்குறேன் என்றுபிரார்த்திக்க ஸ்ரீ சாலிஹோத்திரமுனிவர் பின்வருமாறு சொன்னார். தேவபாகரே முன், கிருதயுகத்தில், கௌசிகன் என்றுபிரசித்த ஞானஒரு

కౌశికో నామ తపసా చ వివర్ధితః । షడంగసహితాన్వేదానధీత్య శుశుభత
రాం । విహితాచారనిరతో యువా బలసమన్వితః । పితృమాతృద్విజాచా
ర్యపరిచర్యాపరాయణః । అనేకగుణసంపన్నశ్శీలవాన్ సజ్జనప్రియః । త
స్యైవం గుణయుక్తస్య ద్విజశ్రేష్ఠస్య ధీమతః । బ్రహ్మచర్యరతస్యాసీన్మతిస్తీ
ర్థనిషేవణే । వినిర్యయౌ నిజగృహాద్గంగాం ప్రతి మహానదీం । ఉత్తరాభి
ముఖోఽపారం సాగరం ప్రేక్ష్య సంసృతిం । యతస్తస్య మహారణ్యే విజనే దం
డకాహ్వయే । మధ్యేస్తముపయాతోభూద్భగవాంస్తు దివాకరః । వ్యాఘ్రా
దిభ్యస్సుభీతస్సన్ శ్వాపదేభ్యో మహత్తమః । నిరీక్ష్య కుంజలీనోభూత్ క్షు
త్పిపాసార్దితో భృశం । ఏవం చింతయమానస్య మనసా చ స్మరన్గృహాన్ । ఉ
దేష్యతి కదా భానుస్సహస్రేణ కరేణ వై । కదా తమస్సమస్తం చ నిరస్తం చ
భవిష్యతి । అహమవ్యాకులో భూత్వా తీర్థం యాస్యామి వై కదా । ఇత్యే
వం గతధైర్యస్య క్షుత్తృష్ణోపహతస్య చ । పూర్వకర్మవశాదాసీత్పురతో

---

ராம்மணன் அருந்தவத்தினால் ஆறு அங்கங்களோடும் வேதங்களை ஓதி மஹாதேஜஸைப் பெற்று தனக்குரிய ஆசாரங்களில் நிலைநின்று, யௌவனபருவத்தை அடைந்து, பலசாலியாகிதாய் தந்தை, பிராம்மணர்கள், ஆசார்யன் இவர்களுக்குப் பணிவிடையை முக்கியமாகச்செய்துகொண்டு சுசியான ஆசாரத்தையும், நற்குணங்களையும், பெற்று பெரியோர்களுக்கு மிகவும் இஷ்டனாக இருந்தான் இவ்விதமான மஹாகுணங்களையுடையவனும், மஹாஞானவானும், பிரமசரியவிரதம் பூண்டவனுமாகிய அந்தக்கௌசிகன்என்னும் பிராம்மணனுக்கு கரையில்லாத கடலாகிய ஸம்ஸாரத்தில் வைராக்கியமுண்டாகிப் புண்ணியதீர்த்தயாத்திரைசெய்ய இச்சையுண்டான வளவில் முதலில் மஹாநதியான கங்கைக்குப்போக நினைத்துத் தன்கிருகத்தினின்றும் வடக்கு முகமாகப் புறப்பட்டு மநுஷ்ய சஞ்சாரமில்லாத மஹாவனமான தண்டகாவனத்தின் நடுவில்போகும்போது சூரியன் அஸ்தமித்தான், அப்பொழுது கௌசிகர் பேரிருளைக்கண்டு புலிமுதலிய காட்டுமிருகங்களுக்கு அஞ்சிபசிதாகங்களால் மிகவும் வருந்தி ஓர்புதரில் மறைந்திருந்து மனதினால் தன் வீடுகளை நினைத்துக்கொண்டு எப்பொழுது சூரியன் உதயமாவான், அவனுடைய ஆயிரங்கிரணங்களால் இந்தப்பேரிருள் எப்பொழுது ஒழியும், யான் எப்பொழுது மனதில்கலக்கமற்று சுகமாகத்தீர்த்தயாத்திரைசெய்வேன் என்று இவ்விதமாகச் சிந்தித்துக்கொண்டு, பசிதாகங்களால் வருந்தி, தைரியமற்றிருக்கிற அந்தக்கௌசிகனுக்கெதிரில் அவனுடைய பூர்வகர்ம வசத்தினால் ஒரு சண்டாளன் தோற்றினான்.

స్య జనంగమః । అతీవకృశదేహస్య ఆయసాభరణస్యచ । రూపంతస్య స
దృష్ట్వాపి క్షుధయా నవివేద హ ॥ కౌశికః ॥ అథాపృచ్ఛత్సచండాళం విక్లబ
స్తు దిశో దశ । విలోకయన్ క్షుధార్తస్సన్నేకమేవ బహూనివ । క్వయాథ బ
తమే తావద్బ్రూత యూయం నరోత్తమాః । అత్రాస్మి విక్లబోనూనం క్షుత్తృ
డ్భ్యాం చన సంశయః । ఇతి పృష్టస్స చండాళో బ్రాహ్మణేనాతి విహ్వలః । కుం
జే ప్రసారయామాస స్వదృష్టిం కుటిలాం తతః । అథాపశ్యద్ద్విజవరం బ్రాహ్మ
ణం తపసావృతం । ఉపవాసపరిశ్రాంతం నిరీక్షుం తమిత స్తతః । అబ్రవీత్స
తదా విప్రం క్షుత్పిపాసార్దితం తతః ॥ చండాళః ॥ కస్త్వం బ్రాహ్మణకుం
జేస్మిన్నిలీనోసీవ సాధ్వసాత్ । కుత్ర గంతుం ప్రవృత్తోసి లక్ష్యతే తీర్థగో
భవాన్ ॥ కౌశికః ॥ తీర్థసేవార్థమధునా ప్రవృత్తోస్మ్యుత్తరాం దిశం । అస్మిన్న
రణ్యేస్తమితో గచ్ఛతోమే దివాకరః । నికుంజేస్మిన్నితో౽భీతస్తమసాంధీకృ
తే నిశి । నిలీనోస్మి మృగాదిభ్యో దుష్టేభ్యో భీతమానసః । క్షుత్పిపాసాభిభూ
తోహమతీవకృశతాం గతః । నాస్మిశక్తోధునావక్తుం దృష్టిర్మే౽పరివర్తతే ।

---

அதிகவிகாரவேஷத்தை யுடையவனும் இரும்புகளால் செய்யப்பட்ட ஆபரணங்களை அணிந்தவனுமான சண்டாளனாகிய, அந்தப்புருஷனுடைய ரூபத்தைக்கண்டும் பசியினால் இளைத்த இந்தபிராமணன் அவனை இன்னானென்று அறியஇல்லை மிகவும் துன்பமுடையவனாகிப் பத்துதிக்குகளையும் பார்த்துக்கொண்டு பசியின் மிகுதியினால் அந்தச்சண்டாள னொருத்தனையே வெகுபேர்களாகக்கண்டு மஹாபுருஷர்களே நீங்கள் எவ்விடத்துக்குப்போகிறீர்கள் எனக்குச்சொல்லுங்கள் மிகவும் பசிதாகங்களால் வருந்தியிளைத்திருக்குறேன் சந்தேகப்படவேண்டாமென்று பிராமணன் கேட்கையில் அந்தச்சண்டாளன் கோணியிருக்கிற தன்பார்வையைப்புதரில் செலுத்திப்பார்க்கையில் ஒருமஹாபிராம்மணன்தபோதனனாய் உபவாசத்தினாலிளைத்துஇங்குமங்கும் பார்த்துக்கொண்டு பசிதாகங்களால் வருந்துவதைக்கண்டு பின்வருமாறுசொன்னான் பிராமணா நீர்யார் பயத்தினால் இந்தப்புதரில் மறைந்திருக்கிறதுபோல் காணப்படுகின்றது எங்கேபோகவேண்டும் மஹாபுண்ணியாத்மாவாகக் காணப்படுகிறீர் என்றுசொல்ல கௌசிகர் அவனைநோக்கி யான்தீர்த்தயாத்திரையாக வடதிசையை நோக்கிவருகையில் இந்தமஹாரண்ணியத்தில் சூரியபகவான் அஸ்தமனத்தை அடைந்தான் பேரிருளால் பயங்கரமான இந்தராத்திரியில் துஷ்டமிருகங்களுக்குஅஞ்சி இந்தப்புதரில் மறைந்தபின்பயமில்லாமலிருக்கிறேன் பசிதாகங்களால் பீடிக்கப்பட்டு மிகவும் இளைத்திருக்கையால் பதில்சொல்லவும் சக்தியில்லை இப்பொழுது என்கண்கள் சுழலுகின்றனஎன்று கௌசிகர்சொல்லக்கேட்டு சண்டாளன் பிரா

చండాళః॥ నిర్గ్యాహికుంజతోవిప్రమమహస్తావలంబనం।కురుష్వయద్యశక్తోసిస్కంధమారుత్త్వమేధునా। గృహాణిప్రాపయిష్యామిమామకానిమహాంతిచ। భక్ష్యైర్భోజ్యైశ్చవివిధైఃపరిపూర్ణానిసర్వతః। ఇత్యుక్తస్తేనసహసాస్కంధారూఢోభవత్తదా।భవనానిసురమ్యాణిజగామచముదాయుతః। తతస్తంవిశేషేణచండాళఃప్రీతమానసః। భక్ష్యైర్భోజ్యైశ్చవివిధైఃపూజయామాసబ్రాహ్మణః। బ్రాహ్మణోపిక్షుధార్తత్వాదనవేక్ష్యైవభోజనం। చండాళస్యగృహేతాంవచ్చకారభ్రాంతమానసః। తతస్తుశయనంప్రాపశ్రయాభృశపీడితః। సుష్వాపచపరిశ్రాంతోనవివేదాపికించన। చండాళోపినిజాంకన్యాంభూషణాచ్ఛాదనాదిభిః। అలంకృత్యాబ్రవీద్వాక్యంసుతాంషోడశవార్షికీం॥ చండాళః॥ ఏహిప్రియసుతేసాధ్విశయానంబ్రాహ్మణోత్తమం। శుశ్రూషస్వపదేచాస్యకరాభ్యాంపీడయస్వహ। బ్రాహ్మణస్యహిశుశ్రూషావిహితాసర్వజాతిషు। తథాహిసద్గతింయాంతిహీనాజ్ఞానేనదుర్లభాః। ఇత్యుక్తాతేనవైపిత్రా

---

மறுஇந்தப்புதரினின்றும்வெளியேவந்துஎன்கையைப்பிடித்துக்கொண்டுவாரும் அப்படிநடந்துவரச் சக்திஇல்லாதபக்ஷத்தில் என்தோளில் ஏறிக்கொள்ளும் இப்பொழுதே அனேகவிதங்களான உணவுகளால் நிறைந்து விசாலமாயிருக்கிற என்கிருகத்திற்கு அழைத்துக்கொண்டுபோகுறேன்என்றுசொல்ல, கௌசிகன் அப்பொழுதேவிரைந்தெழுந்து அந்தச்சண்டாளன் தோளில்ஏறி அவனது அழகிய வீட்டைச் சந்தோஷமாக அடைந்தான். பின்புசண்டாளன் நமக்குக்கிடையாதுகிடைத்ததென்று உள்மகிழ்ந்து அந்தபிராம்மணனைப்பலவகைஉணவுகளால்விசேஷமாகஆராதித்தான்பிராம்மணன்பசியினால் பரிதபிக்கையால் மதிமயங்கி இதுசண்டாளனுடைய உணவென்றுபாராமலே புசித்து அந்த ஆயாஸத்தினால் உண்டான நித்திரைமிகுதியால் சயனித்தான் அங்குள்ளசகலவஸ்துக்களையும் கண்களால்பார்த்தும் பிராம்மணன் அதிகசிரமத்தினால் அவற்றுள் ஒன்றையும் சண்டாளசம்பந்தமாக அறியஇல்லை அப்படி சிரமப்பட்டு புசித்து சயனித்திருக்கிறபிராம்மணனைப்பார்த்து சண்டாளன் பதினாறுவயதையுடைய தன்பெண்ணை ஆடையாபரணங்களால் அலங்கரித்து என்மனத்திற்கு இனிதாகிய பெண்மணியே கற்புடையவளே இங்குவா இதோசயனித்திருகிற மஹாபிராம்மணனுக்கு சிசுரூஷைசெய் அவருடைய பாதங்களை உனதுகைகளால்வருடி உபசாரம்செய் ஸகலஜதியாலும் பிராம்மண சிசுரூஷைசெய்யத்தக்கது அப்படிபிராம்மணனுக்கு உபசாரம்செய்து ஞானமில்லாதவர்கள்கூட துர்ல்லபமாகிய கதியை அடைகிறார்களன்றோ என்று கட்டளையிட அந்தச்சண்

తుష్టా మాతంగకన్యకా । పాదయోర్విదధే తస్య పీడనం ప్రీతచేతసా ।
బ్రాహ్మణోఽపి పరిశ్రాంతో యామమాత్రం ప్రసుప్య చ । ప్రబోధముపయా
తోఽభూద్విగతాధ్వపరిశ్రమః । పాదాభ్యాశే వర్తమానాం దృష్ట్వా మాతం
గకన్యకాం । శ్యామాం కమలపత్రాక్షీం సుకేశీం తనుమధ్యమాం । బిం
బాధరాం చక్రవాకస్ఫురత్కుచయుగోన్నతాం । రాకాశశాంకవదనాం
శుచిగండస్థలోజ్జ్వలాం । లసత్కుసుంభవసనాం సర్వాభరణభూషితాం ।
రతిమేవ తదా మే నేత్రప్రత్యక్షీకృతవిగ్రహాం । నిరీక్ష్యైవ తదా కన్యామనంగశ
రపీడితః । అబ్రవీత్ప్రశ్రితం వాక్యం కామార్థసహితం తదా ॥ కౌశికః ॥
బాలే సుశ్రోణి భద్రం తే కమలాయతలోచనే । కృతార్థం మాం కురుష్వాద్య
మదనాస్త్రవిమోహితం । ఇత్యుక్తా తేన సా కన్యా వ్రీళయావనతాననా ।
న కించిదూచే సా కన్యా తిర్యక్కృతనిరీక్షణా । ప్రతిగృహ్య చ తాం కన్యాం
కనకాభరణోజ్జ్వలాం । బ్రాహ్మణోఽపి ప్రసహ్యైవ కృతార్థమకరోత్స్మ
రం । ఏవం చండాళకన్యాయాః కృత్వా సంగమమార్థవత్ । తయా సహ

---

டாளகன்னிகையானவள் மனமகிழ்ந்து அப்படியே அந்தபிராமணனது கால்களை அவன்நடந்துவந்த சிரமந்தீரப்பிடித்தாள். பிராமணன் மிகுந்தசிரமத்தினால் ஒருசாமகாலம்நித்திரைசெய்துபின்புவிழித்துக்கொண்டு வழிநடந்த சகலசிரமங்களுந் தீர்ந்தவனாகித் தன்பாதத்தினருகில் யௌவநபருவமுடையாளாய்தாமரைஇதழ்போன்ற கண்களையும்கருமையாகிய கூந்தலையும்சிறிதாகிய இடையையும்கோவைப்பழத்தையொத்திருக்கிற அதரத்தையும் ஒன்றோடொன்று இணங்கிப் பருத்துயர்ந்து சக்கிரவாக பக்ஷிகளையொத்த ஸ்தநங்களையும் பரிபூர்ணசந்திரபிம்பத்தை நிகர்த்தமுகத்தையும் சுசியானகபோலங்களையும் பெற்று குசும்பாவஸ்திரத்தையுடுத்து சகலாபரணங்களையும் அணிந்திருக்கிற சண்டாளகன்னிகையைக்கண்டு தன்கண்ணுக்கு விஷயமாக வந்திருக்கிற ரதிதேவியாகநினைத்தான் அவளைப்பார்த்தவுடனே கௌசிகபிராம்மணன் காமபீடிதனாகி விநயத்துடன் அந்தப்பெண்ணை நோக்கி பெண்ணே அழகியநிதம்பத்தையுடையவளே கமலாக்ஷீ உனக்கு மங்களம்உண்டாகுக,காமபாணங்களால் வருந்துகிற என்அபீஷ்டத்தை நிறைவேற்றவேண்டுமென்று வேண்டிக்கொள்ள அந்தக்கன்னிகையானவள், லஜ்ஜையினால் தலைகுனிந்து நின்று, குறுக்காகப்பார்த்துக்கொண்டு, ஒன்றையும் சொல்லஇல்லை, பிராம்மணன் ஸ்வர்ணத்தினால் செய்ததிவ்யாபரணங்களை அணிந்து பிரகாசிக்கிற அந்தப்பெண்ணை, பலாத்காரத்தினால் பிடித்து, காமபூர்த்தியை செய்துகொண்டான். இவ்விதமாக அந்தபிராமணன் அந்தச் சண்டாளகன்னிகையைப் புணர்ந்துத் தன்னைப் பயன்பெற்றவனாக நினைத்துக்

పరిభ్రామ్యన్పృథివీమండలంమహత్ । తుండీరమండలంప్రాపనానాతీ
ర్థనిషేవితం । కదాచిద్భాగధేయేనవీక్షారణ్యంజగామహ । హృత్తాపనా
శనంనామపద్మషండపరిష్కృతం । తీర్థానాముత్తమంతీర్థందర్శనాత్పా
పమోచనం । పౌషేమాసేసకృత్స్నాత్వానత్వాతత్రజనార్దనం । జగా
మచయథాదేశంతథైవసహభార్యయా । ఏవంయౌవనకాలంతమతీత్య
జరయార్దితః । వార్ధకంసముపాగమ్యకాలధర్మముపాగతః । తస్మిన్పం
చత్వమాపన్నేబ్రాహ్మణేజ్ఞానదుర్లభే । యమదూతాస్సమాగమ్యయమ
లోకముపానయన్ । యమస్తంమహాభాగందృష్ట్వాచసహసోత్థితః ।
ప్రత్యుజ్జగామభీతస్సవేపమానఃపునఃపునః । నిర్భత్స్యకింకరాంశ్చైవసం
పూజ్యద్విజసత్తమం । దేవయానేనయాహీతిప్రశ్రితస్తమువాచహ ।
బ్రాహ్మణోదేవయానేనజగామానుత్తమంపదం । వైష్ణవంభాసమానం

---

கொண்டு அவளையும் சேர்த்துக்கொண்டு, இந்தப்பூமண்டலம் முழு
தும் திரிந்து வருகையில் ஒருநாள் அனேகபுண்ணிய தீர்த்தங்களால்
நிறைந்ததான துண்டீர மண்டலத்தையடைந்து மஹாபாக்கியவச
த்தினால் வீக்ஷாரண்ணிய க்ஷேத்திரத்தை அணுகினான், அதில் தாம
ரைமலர்களால் அலங்கரிக்கப்பட்டு தர்சனத்தால் பாபங்களை ஒழிப்
பதாகையால் சகலபுண்ணிய தீர்த்தங்களிலும் உத்தமமாயிருக்கிற
ஹிர்த்தாபநாசனமென்னும் மஹாதீர்த்தத்தில் தை அமாவாஸ்யை
யில் ஸ்நாநம்செய்து ஸ்ரீ வீரராகவனைச் சேவித்து அந்த மனைவியுட
ன்தன் தேசத்தையடைந்தான் இவ்விதமாக யௌவநகாலத்தை ஒழி
த்துக் கிழத்தனத்தை அடைந்து இறந்தான், அஜ்ஞானியான அந்த
பிராம்மணன் இறந்தவுடனே, யமதூதர்கள் வந்து அவனையமலோக
த்திற் சேர்த்தனர், யமதேவன் மஹாநுபாவனாகிய அந்தபிராம்மண
னைக்கண்டவுடனே, எழுந்திருந்து எதிர்கொண்டு, நடு நடுங்கித்தம்
கிங்கரர்களை வெருட்டி பிராம்மணனை நன்றாக ஆராதித்து, சுவாமி!
தேவயான மார்க்கத்தில் எழுந்தருள வேண்டுமென்று பிரார்த்தித்
தான். பிராம்மணனும் திவ்பவிமாநத்தில் ஏறி, அனேககோடி சூரிய
ர்களுதித்தாற் போலப்பிராசிக்கிற தும்,மீட்சி யின்றி வசிக்கத்தக்கது
ம் ஸர்வோத்தமமானதுமாகிய அந்தஸ்ரீவைகுண்டலோகத்தைஅடை
தான்.ஆகையால் தேவயாகரேஅதிகபாபத்தைச் செய்தஅந்தக்கௌ
சிக பிராம்மணன், ஹிர்த்தாபநாசநதீர்த்தத்தில் ஸ்நாநம்செய்தமஹி
மையினால் பரமபதத்தையே பெற்றான்.புண்ணியசாலியானபுருஷன்

తద్యతో నావర్తతే పునః । అతిపాపప్రసక్తోపి విప్రస్తీర్థానుభావతః । అగ
మత్పరమంధామకింపునఃపుణ్యకృజ్జనః॥ ఓం॥

ఇతిశ్రీమార్కండేయపురాణే క్షేత్రకాండేతీర్థమాహాత్మ్యే కౌశిక
బ్రాహ్మణపాతకనివృత్తికథనంనామ పంచశతతమోధ్యాయః.

---

## షష్ఠాధ్యాయ ప్రారంభః.

ఓం॥ శ్రీశాలిహోత్రః॥ భూయశ్శ్రుణుష్వవిప్రేంద్రతీర్థమాహాత్మ్యముత్తమం । యస్యశ్రవణమాత్రేణయాంతిపాపానివైలయః॥ పితామహస్యపుత్రోభూద్దక్షో నామప్రజాపతిః । తస్యైకాకన్యకానామ్నాసతీతివిదితాభవత్ । ఉపయేమేసతాంకన్యాంహరస్త్రిపురమర్దనః । న్యవసద్ధిమవత్పార్శ్వే తపఃకుర్వన్ తయాసహ । ఏతస్మిన్నేవకాలేతుయష్టుకామఃప్రజాపతిః । దక్షోనిమంత్రయాంచక్రేపుత్రీర్జామాతృభిస్సహ । సత్యాసహహరంనైవపుత్ర్యాజామాతరంపునః । నిమంత్ర

---

அதில் ஸ்நாநம்செய்தானுகில் உத்தமபலனைப் பெறுவதற்குச்சொல்ல வேண்டுமோ, என்று ஸ்ரீ சாலிஹோத்திர முனிவர் அருளிச்செய்தார்.

ஸ்ரீ மார்க்கண்டேய புராணத்தில் க்ஷேத்திரகாண்டத்தில்தீர்த்த மாஹாத்மியத்தில் கௌசிகனது பாதகத்தைத்தீர்த்தகதையைச்சொல்லுகிற நூற்றைந்தாவது அத்தியாயம் முடிந்தது.

---

## ஆறுவது அத்தியாயம்.

ஸ்ரீ சாலிஹோத்திரமுனிவர் பின்னும் அருளிச்செய்கிறார். தேவ பாகரே! பின்னும் அந்தஉத்தமதீர்த்தத்தின்மகிமையைக்கேளும், அதைக்கேட்டமாத்திரத்தில்சகலபாபங்களும்நசிக்கின்றன. பிதாமஹனுக்கு தக்ஷபிரஜாபதிஎன்னும் புத்திரர்இருந்தார். அவருக்குஸதிஎன்னும்பெயரை உடையவளான ஒரு பெண்ணிருந்தாள். திரிபுராசுரஸம்ஹாரியான உருத்திரன் அந்தஸதியை விவாகம் செய்து, அவளுடன்இமையமலைச்சாரலில் தவஞ்செய்திருந்தார். அத்தருணத்தில்தக்ஷபிரஜாபதியானவர் யஜ்ஞம்செய்ய நிச்சயித்துத் தம்பெண்களைத்ததம் மணவாளர்களுடன் தான்செய்கிற யக்கியத்திற்கு வரவழைத்தார். அப்பொழுது தன்மருகராகிய உருத்திரனிடத்தில் அசுசித்தன்மையை

యామాస తదా అశుచిత్వం విచారయన్ । శ్రుత్వాథ తద్యజ్ఞవిధానము త్తమం సతీ చ దేవీ సహసా జగామ । నిషేవితా పారిషదైః కుతూహలాద్భర్త్రా నిషిద్ధాపి నివేశనం పితుః ॥ నిరీక్ష్య సా తాతమనన్యమానసం జగాద కోపాత్పతిశీలవర్తినీ । హరస్య భార్యా హరిణాయతేక్షణా కరోరభావస్ఫురితాధరా సతీ ॥ నిమంత్రణం నైవ చకర్థ కిం పునర్జగద్విభో మే త్రిపురాణి జఘ్నుషః । భర్తుర్హరస్యామితవిక్రమస్య కృత్వాహ్వానం హ్యన్యజామాతృకాణాం ॥ కిం విప్రియం తేన కృతం తవాసీత్ త్వయాపి వా తస్య కృతం మయాగః । నూనం న చాంతం తవ యజ్ఞకర్మ సంప్రాప్స్యతి ప్రాక్కృతవత్కరోషి । మమావమానాత్ఖలు భర్తురద్య త్యజామి దేహం భవతస్సమక్షం । త్వయాస్య చాసీత్ప్రథమాభిధానం కర్తాధునా నైవ భవేచ్ఛ భద్రం ॥

---

நினைத்து அவனைவரவழையாதிருந்ததோடு அவரைவிட்டுப் பிரியாமலிருக்கிறதன் பெண்ணாகியஸதிஎன்பவளையும் அழைக்க இல்லை. இப்படிஇருக்கையில் தங்கள் பிதாவானதக்ஷர்யக்கியம் செய்வதைக் கேட்டு ஸதிதேவியானவள்ஸகலபரிஜநங்களோடுங்கூடிப்புறப்பட்டு, தன் மணவாளனாகியருத்திரன் போகவேண்டாமென்று தடுக்கினும் அதை மீறித்தன் பிதிர்கிருகத்தை அடைந்தாள். அவ்விடத்தில் தன்னைக்கண்டு வந்தாயாவென்று கேளாமல் தியாநத்திலிருக்கிறதன்பிதாவாகியதக்ஷனைப் பார்த்து, கோபத்தினால் மனங்கலங்கி, உதடுகள் துடிக்க மான்விழியைப்போன்ற விழிகளால் பார்த்து, ஹரனுடையபார்யையான ஸதிதேவியானவள், தன்பதியின் ஸ்வபாவத்தில் நிலைநின்றவளாகி, தக்ஷனைக்குறித்துச் சொல்லுகிறாள். தந்தையே நீர்உமது மருமக்கள் எல்லாரையும், உமதுபெண்களோடுவரவழைத்து, திரிபுராசுரஸம்ஹாரியாயும், அளவில்லாத பராக்கிரமத்தையுடையவராயும், ஜகதீசுவரனையும், என்பதியாயு மிருக்கிற ருத்திரனை உமது யக்கியத்திற்குநீர் ஏன் அழைக்கஇல்லை அவர் உமக்கு என்ன அநிஷ்டத்தைச் செய்தார் அல்லது நீர் ஏதாகிலும் அவர்விஷயத்தில் அநிஷ்டத்தைச் செய்தீரா? அல்லது யானாகிலும் உம்முடைய விஷயமாக அபராதத்தைச் செய்தேனோ? நிச்சயமாக உமதுயக்கியமானது சரியாக முடியப்போகிறதில்லை, கேவலம் மூடர்களைப்போல்ச்செய்கிறீர் என் பர்த்தாவை நீர்யக்கியத்தில் அழைக்காமல்அவமதி செய்தமையால் உம்மாலுண்டானதாகிய இச்சரீரத்தை உமக்கெதிரில் தானேவிட்டு விடுகிறேன், இதற்கு முற்காலத்தில் உமது கிருகத்தில் எந்தவிசேஷம் நடந்தபோதிலும் முதலில் என் பதிக்குச்சொல்லுகிற வழக்கமன்றோ. இப்பொழுது அவ்விதமாகச் செய்யாமையால் இந்தயக்கியமானது அமங்களமாக முடியுமென்று சொல்லிக் கொண்டேஸதிதேவியானவள் தன்பதியை அவமதிசெய்ததைச் சகிக்கமுடியாது

ఇతీరయంతీపితురగ్రఏవతత్యాజదేహంనిజయోగయోగతః। విస్మాపయం
తీదివిషద్గణాధిపానసహ్యకోపార్ద్దయితావమానతః ॥ గణాశ్చసర్వేఖలు
భీతమానసాదిశంయయుర్యత్రపురాంతకస్థితః। నివేదయామాసురశే
షమగ్రతఃకృతంయదాసీద్ధరభార్యయాతదా ॥నిశమ్యతద్వాక్యమభద్రసం
హితంసవీరభద్రంజనయాంచకారహ। లలాటతస్స్వేదలవాద్భయంకరం
ప్రశాంతశాంతిఃకిలసంహృతిక్షమం ॥ పురస్థితంతంసమవేక్ష్యలోచనై
ర్వమన్బహిర్వహ్నిమిదందహన్నివ । జగజ్జగాదాశుజగత్పతిస్స్వయంస్వి
ద్యన్నిజాంగోద్భవమన్యునాహరః ॥ సపాపకృద్యత్రకరోతివైమఖంస్వర
క్షణాదక్షతపాఃప్రజాపతిః । నామ్నాపిదక్షోపిమమాపకారకృత్ త్వంత
త్రగచ్ఛాశునయస్వతంయమం॥ ఇతీరితస్తేనసవీరభద్రఃప్రవర్తతేయత్ర
హిదక్షయజ్ఞః। జగామతత్రాశుతదాజ్ఞయైవవీరోరిభావాద్ధృతహేతిసం
ఘః॥ దక్షస్యయజ్ఞేథదదర్శదేవాన్ సఋత్విజోమంత్రవిదోనిషణ్ణాన్।భృ
గుంక్రతుంచాంగిరసంవసిష్ఠంమరీచిమత్రింపులహంపులస్త్యం ॥ దృష్ట్వా

---

கோபத்தினால், தேவர்களனைவரும் ஆச்சரியப்படும் வண்ணம் தந்
தையின் முன்பேதனது யோகமகிமையினால் சரீரத்தை விட்டாள்,
அவளுடன் வந்தகணங்கள் மிகவும் பயந்து எவ்விடத்தில் திரிபுராந்
தகரான ருத்திரன் வீற்றிருக்கிறாரோ, அவ்விடத்திற் சென்று அவர்
முன்பேஸதிதேவி செய்தசரித்திரத்தைச் சொன்னார்கள், அமங்கள
மாக இருக்கிற அந்தவசநத்தைக் கேட்டு ருத்திரன் சாந்திகுணத்தை
விட்டு மஹாகோபத்தினால் தனது நெற்றியிலுண்டான வேர்வையில்
நின்றும் ஸகலலோகங்களையும் ஸம்ஹரிக்க வல்லவனாகி மஹாபயங்
கரமூர்த்தியாயிருக்கிறவீரபத்திரனையுண்டாக்கி இந்தஜகத்தைஎல்லா
ம்தஹிப்பவர்போல்,தம்கண்களால் அக்கினியைக்கக்கிக்கொண்டு ஜக
தீசனானதான் கோபத்தினால் சரீரமடங்க வேர்வையுற்று எதிரில்நிற்
கிற வீரபத்திரனைநோக்கிப்பின் வருமாறுசொன்னார் தன்னைரக்ஷித்
துக்கொள்ளவும் வல்லமையில்லாதவனே யாகிலும் பெயரினால்மாத்
திரம் (தக்ஷனென்று)வல்லவனென்று பிரசித்தபாபியான அந்ததக்ஷ
பிரஜாபதி எவ்விடத்தில்யக்கியம்செய்கிறானோஅவ்விடத்திற்சென்று
எனக்கு விரோதியான அவனையமலோகத்திற்கு அனுப்புவாயாக எ
ன்றுருத்திரன் கட்டளையிட, வீரபத்திரன்தக்ஷன்யக்கியம்செய்கிற
விடத்திற்சென்று ருத்திரனதுகட்டளையின்படி மஹாசத்துருவாகிப்
பற்பல ஆயுதங்களைத்தரித்துக்கொண்டு, அந்தயக்கியசாலையில்புகுந்
து, அவ்விடத்தில் சகலமந்திரங்களையும் அறிந்தவர்களாக வீற்றிரு
க்கின்ற ருத்துவிக்குகளையும்,தேவர்களையும்அங்கிரா, வசிஷ்டர்,மரீசி,
அத்திரி, புலஹர்,புலஸ்தியர்,ஆகிய இந்தமுனிவர்களையும் பார்த்துக்

చతంవీరముదారసత్త్వం సంవర్తరుద్రంధృతవిగ్రహం వా। ప్రదుద్రువుః కేచ
నతత్ర దేవాః యోద్ధుంచ కేచిత్సహసా ప్రవృత్తాః ॥ సవీరఏకోనిజచాపము
క్తైః పతత్రిభిర్భిన్ననికృత్తగాత్రైః । తస్తారభూమింతరసాసురేశైః పురాపు
రారాతిరివాసురాధిపైః॥ ఉత్పాట్యతచ్ఛ్మశ్రుభృగోస్సకోపాచ్ఛిత్త్వాపద
క్షస్యశిరోనికృత్య। ఖడ్గేనతద్యజ్ఞహుతాశనస్యప్రద్యోతమానాసుశిఖాసు
తూర్ణం ॥ ఏవంతావద్యజ్ఞవిఘ్నంతదానీంప్రీతింకృత్వారాక్షసానాంచ
వీరః। రుద్రస్యాథోపాదమూలంజగామసర్వంతస్మైజ్ఞాపయామాసతద్వ
త్ ॥ యదాదక్షస్యశిరచ్ఛేదవీరస్తత్రైవాసీదగ్రతోబ్రహ్మహత్యా।
హరశ్చాసౌముక్తిమిచ్ఛన్యదస్యాశ్చకారేశోబహుతీర్థాభిసేవాం ॥ య
దాససర్వతీర్థానాంసేవయాబ్రహ్మహత్యయా। నముక్తశ్చతదావిప్ర
విషణ్ణోభూత్త్ర్యంబకః। జగాదాకాశవాణీతంకృపయావిష్టమానసా।
తతోవిషణ్ణవదనంప్రాణాయామపరాయణం ॥ ఆకాశవాణీ ॥ హృత్వాప

---

கொண்டுவருகையில் பிரளயகாலத்தில் சர்வசம்ஹாரகரான ருத்திர
னேபிரத்தியக்ஷமாய்வந்திருக்கிறனென்று தோற்றும்படி மஹாபயங்
கரனும்மஹாபலசாலியாயு மிருக்கிற வீரபத்திரனைக்கண்டவுடனே
சிலதேவதைகள் பயந்தோடினர்கள் சிலர் யுத்தம்செய்யத்துணிந்த
னர். அப்பொழுதே அந்தவீரபத்திரன் தனியேநின்றுதனது வில்லினி
ன்றும் விடப்பட்டபற்பலபாணங்களால் தேவர்களுடைய சரீரங்களை
த்துண்டந் துண்டமாகநறுக்கிப் பூமியெங்கும் எறிந்து, முன்திரிபுராசு
ரஸம்ஹாரியான ருத்ரன் அசுரர்களை அழித்ததுபோல் அழித்தும், பி
ருகுமுனிவருடைய மீசையைப்பிடுங்கியும், அந்தத்தக்ஷருடையதலை
யை மஹாகோபத்துடன் கத்தியினல் அறுத்துக் கிளர்ந்தெரிகிற அ
வருடையயாகாக்கினி ஜ்வாலையில் விரைந்து எறிந்தும். இவ்விதமாக
தக்ஷயக்கியத்தை அழித்து, ராக்ஷஸர்களுக்குப் பிரீதியைச்செய்துஅ
ந்தவீரபத்திரன் ருத்திரனுடைய திருவடிகளை அடைந்துஸகலத்தை
யும் அவருக்கு அறிவித்தான். தேவபாகரே எப்பொழுது ருத்ராம்
சஸம்பூதனுகிய வீரபத்திரன் அந்தருத்திரனுடைய கட்டளையினல்
தக்ஷருடையதலையை அறுத்தானே அப்பொழுதே பிரமஹத்தியான
து ருத்திரனுடைய எதிரில்வந்து நின்றது. அதை ஒழிப்பதற்காகருத்
திரன் ஸகலபுண்ணிய தீர்த்தங்களிலும் ஸ்நாநம்செய்து வந்தும்
அந்தபிர்மஹத்திவிட இல்லை. அதனல் ருத்திரன் வருந்தி பிராணயா
மங்களைச்செய்கையில், ஆகாயவாணீ, கருணையால் ருத்திரனை நோக்
கிச்சொல்லிற்று, ருத்திரனே வீக்ஷாரண்ணிய க்ஷேத்திரத்தில் ஹிர

నాశనం నామ విభో స్తీర్థమనుత్తమం । వీక్షారణ్యే ప్రసిద్ధం తం యాహి ముక్తో భవిష్యసి ॥ రుద్రః॥ శ్రుత్వైవమాకాశగిరం పురాధర్మార్థసంహితాం। బ్రహ్మహత్యావిమోక్షార్థం యయౌ హృత్తాపనాశనం। వీక్షారణ్యే దదర్శాథ సరస్సురహరో విభుః । యత్ర స్నాత్వా చ పాపేభ్యస్సర్వేభ్యో ముచ్యతే జనః । హృత్తాపనాశనం నామ విఖ్యాతం భువి యత్సరః। తత్ర స్నాత్వా విముక్తో భూదీశ్వరో బ్రహ్మహత్యయా। యతః పుణ్యం భగవతాధిష్ఠితం తీర్థముత్తమం । వీక్షారణ్యం చ తత్రాసీచ్ఛేత్రే వాసం తతో హరః । ఇదానీమపి విష్ణ్వాఖ్యం ధామ శేషాఖ్యతల్పగం । ఈశ్వరః ప్రణమన్నామ వాయవ్యాం దిశి తిష్ఠతి । ఏవం ప్రభావవత్తీర్థం నామ్నా హృత్తాపనాశనం । ఖ్యాతం త్రిభువనే తస్మిన్నత స్తీర్థం పరిణమ్యతాం ॥ దేవభాగః ॥ కథం స భగవాన్ శంభు స్శిరసా ధృత్య మహానదీం । గంగాం త్రిపథగాం దేవీం మహాపాతక

---

த்தாபநாசநமென்னும் மஹா புண்ணியதீர்த்த மிருக்கிறது, அது ஸர்வேசுவரனை ஸ்ரீவீரராகவனுடைய அதிஷ்டாநத்தினுல் உத்தமதீர்த்தமாக பிரசித்தமாயிருககிறது. அதைஅடைந்தீராகில் பிரம்மஹத்தியினின்றும் விடுபடுவீர். என்றிவ் விதமாகச்சொல்லக்கேட்டு, தருமமாகியபொருளுடைய இந்தவசநத்தில் சிரத்தையுடன் பிர்ம்மஹத்திதோஷ நிவிர்த்திக்காக வீக்ஷாரண்ணிய க்ஷேத்திரத்தில் சென்று ஹிர்த்தாபநாசநமஹா தீர்த்தத்தைத் தர்சித்தார். எந்தத்தீர்த்தத்தில் ஸ்நாநம்செய்கிறவர்கள் ஸகலமஹாபாதகங்களில் நின்றும் விடுபடுகிறுர்களோ, எந்தத்தீர்த்தத்தில் ஸநாநம் செய்கிறவர்கள் தமது ஹிருதயத்திலிருக்கிற தாபத்தை ஒழித்துக்கொள்ளுகிறுர்களோ, அதனுல் எந்தத்தீர்த்தம் ,ஹிர்த்தாபநாசநமென்கிற பெயரைப்பெற்றதாகிறதோ, அந்தமஹாஸரஸ்ஸில் ருத்திரன் நீராடி, பிர்ம்மஹத்தியினின்றும் விடுபட்டார். ஞானபலைசுவர்யாதி ஷாட்குண்ய பரிபூர்ணனும் ஜகத்காரண பூதனுமான ஸ்ரீ வீரராகவன் நித்யவாசம் செய்கிறதினுல் அந்தத்தீர்ததமும் அந்த வீக்ஷாரண்ணிய க்ஷேத்திரமும் ஜகத்தில் உத்தமமாகி விட்டன. அந்த க்ஷேத்திரத்தில் ருத்திரன்நித்தியவாஸத்தைச் செயதார். இப்பொழுதுகூட சேஷசயநத்தில் திருக்கண்வளர்ந்தருளுகிற ஸ்ரீ விஷ்ணு வென்னும் மஹாதேஜஸ்ஸைநித்தியமும் தர்சித்துக்கொண்டு அந்தப்புஷ்கரிணியின்கரையில் வாயுதிக்கில் இருக்கிறுர். தேவபாகரே ! இவ்விதமகிமைகளால் ஹிர்த்தாபநாசநமென்று சகலலோகங்களிலும் பிரசித்தமான அந்தத்தீர்த்தத்தை நீரும் அடைந்து வந்நநம்செய்யக்கட்வீர்என்று ஸ்ரீசாலிஹோத்திரமுனிவர் அருளிச்செய்ய தேவபாகர் முனீந்திரரே அந்தருத்திர பகவான்பகீரதசக்கிரவர்த்தியினுல் பிரார்த்திக்கப்பட்டுஇப்புவியில்அவதரித்ததும்ஸ்ரீ விஷ்ணுபாதாரவிந்தத்தினின்றும்ஆவிர்ப்பவித்ததும்

నాశినీం । విష్ణుపాదాంబుజోద్భూతాం సాగరస్వర్గపద్ధతిం । హిత్వా
పనాశనం తీర్థం యయౌ పాపనుత్తయె ॥ శ్రీశాలిహోత్రః ॥ సా
ధుపృష్టోస్మి భవతా మునేసూక్ష్మమనీషయా । అత్రైవోదాహరంతీమమి
తిహాసం పురాతనం । నారదస్య చ దేవర్షేస్తత్పితుశ్చ స్వయంభువః ।
కదాచిన్నారదో లోకాన్నిరీక్ష్య చ సమంతతః । భూలోకముపయాతో
భూత్తత్ర తుండీరమండలం । వీక్షారణ్యం విచిత్రం చ సర్వలోకేషు విశ్రు
తం । విస్మయం పరమం ప్రాప మునీంద్రాన్ స్నాతుమాగతాన్ ॥ వసి
ష్ఠం భార్గవం వ్యాసమత్రిం వాల్మీకిమేవ చ । పులస్త్యం పులహం చైవ క్రతు
మాంగిరసం తథా । అరిష్టనేమినం చాపి జమదగ్నిం మహామునిం । వి
శ్వామిత్రం గాధిపుత్రం ప్రతిసర్గవిధాయినం । పప్రచ్ఛ నారదో తీవ సంశ
యాపన్నమానసః ॥ నారదః ॥ దర్శే పుష్యే పుణ్యతిథౌ హిత్వా త్రిపథగాం
నదీం । కిమర్థమత్ర స్నాతుం వై యూయం హి సముపాగతాః ॥ మునయః ॥ స

---

ஸாகரர்களான அறுபதினாயிரம் ராஜகுமாரர்களுக்கு ஸ்வர்க்கவழியாய்நின்று நற்கதியைத்தந்ததும் மஹாபாபங்களையும் நசிப்பிக்கவல்லதுமாகிய கங்கை தன்ஸ்வாதீநத்தில்இருக்க அதைவிட்டுத் தனதுபாபத்தை ஒழிப்பதற்காக ஏன்ஹிர்த்தாபநாசநதீர்த்தத்தை அடைந்தார் அதை அருளிச்செய்யவேண்டுமென்று வினவ ஸ்ரீ சாலிஹோத்திரர் அருளிச்செய்தார் தேவபாகரே சூக்ஷ்மபுத்தியையுடைய நீர்நன்றாகக்கேட்டீர் இதுவிஷயத்தில் தேவரிஷியான நாரதருக்கும் அவர்பிதாவாகிய சதுர்முகனுக்கும் நடந்தஸம்வாதமாகிய இதிஹாஸத்தைப்பெரியோர் சொல்லுகின்றனர் அதை நீர்கேளும்.

முன்ஒருகாலத்தில் நாரதமுனிவர் சகலலோகங்களையும் பார்த்துக்கொண்டு பூலோகத்தில்வந்து அதில் துண்டீரமண்டலத்தையும் அதில் விசித்திரமான வீக்ஷாரண்ணியத்தையும் அதில்ஸகலலோகங்களிலும் பிரசித்தமானஹிர்த்தாபநாசநமென்னும் மஹாதீர்த்தமாகிய ஒரு புஷ்கரிணியையும்கண்டு ஆச்சரியத்தைஅடைந்து அவ்விடத்தில் நீராடவந்திருக்கிற முனீந்திரர்களான வசிஷ்டர் பார்க்கவர் வியாஸர் அத்திரி வால்மீகி, புலஸ்தியர் புலஹர் கிரது அங்கிரா அரிஷ்டநேமி ஜமதக்கினி, காதியின்குமாரராய் பிரமன்போல் வேறுருஸ்ருஷ்டிகர்த்தாவாகி இருக்கிற விசுவாமித்திரர் ஆகிய இவர்களைககண்டு மனதில் விசாரிதது மிகுந்தஸந்தேகத்தையடைந்து அம்முனிவர்களைநோக்கி முனீந்திரர்களே புண்ணியதிதியாகிய இந்தத்தை அமாவாஸ்யையில் மஹாநதியாகிய கங்கையைவிட்டு இந்தத்தீர்த்தத்தில்நீங்கள்நீராடவந்த காரணமென்னவென்றுகேட்கரிஷிகள்சொல்லுகின்றனர் நாரதரே!நீர்

ర్వజ్ఞోపి నజానీషే సాక్షాత్పుత్రోసి వేధసః। తీర్థస్యాస్య హి మాహాత్మ్యం విచిత్రం లోకవిశ్రుతం। జానాతి భగవానేకస్స్వయంభూశ్చతురాననః। వక్తుం వైనవయం శక్తాస్సకాశం బ్రహ్మణః పితుః । గత్వా పృచ్ఛస్వ సందేహం భగవాన్ శమయిష్యతి । తస్మాదేవ వయం తావన్మాహాత్మ్యం సర్వతోధికం । మాహాత్మ్యమద్భుతం సమ్యక్ శ్రుత్వైవం సముపాగతాః॥ శ్రీశాలిహోత్రిః ॥ తథేతి తత్ర స్నాత్వా వై నారదస్తు మహామునిః। పితుస్సకాశమగమత్సంశయావిష్టమానసః । అభివాద్య విధాతారం వినతః పార్శ్వతస్థితః ।అపృచ్ఛత్సంశయం తీర్థవిషయం వీతమత్సరః।బ్రహ్మన్భూమండలే పుణ్యే వీక్షారణ్యే మహత్తరం । దృష్టం తీర్థం మహాపుణ్యం నామ్నా హృత్తాపనాశనం । గంగాదితీర్థాదధికం కథితం పులహాదిభిః । కథం గంగాదితీర్థేభ్య ఆధిక్యం తస్య మే వద।హృత్తాపనాశనస్యాసీత్త్రిషులోకేషు విశ్రుతం ॥ బ్రహ్మా॥ నమస్కృత్యాప్రమేయాయ విష్ణవే ప్రభవిష్ణవే । అవికారాయ

---

ஸர்வஜ்ஞராயிருந்தும் இதை அறிந்திலீரோ நான்முகனுடைய புத்திராகிறீரே விசித்திரமாயும் உலகத்தில் பிரசித்தமாயுமிருக்கிற இந்தப் புண்ணியதீர்த்தத்தின் மகிமையை ஸ்யம்புவான சதுர்முகதேவன் ஒருவனே அறிகிறான் அதை நாங்கள் சொல்லச் சக்தியில்லாதவர்கள். ஆகையால் பிதாவாகிய சதுர்முகனிடத்திற்சென்று உமது ஸந்தேகத்தைக்கேளும் அந்தப்பகவான் அதையொழித்துத் தெளிவிப்பார் நாங்களும், ஸர்வதீர்த்தங்களிலும் அதிகமான இந்தத்தீர்த்தத்தின் அத்புதமான மாகாத்மியத்தை அந்தச்சதுர்முகனிடத்தினின்றும் நன்றுகக்கேட்டு இவ்விடத்துவந்தோம் என்றுசொன்னார்கள். தேவபாகரே! இவ்விதமாகமுனிவர்கள் சொல்லக்கேட்டு நாரதபகவானும் அப்படியே செய்கிறேனென்றுசொல்லி அந்த ஹிருத்தாபநாசந புஷ்கரிணியில்நீராடி மனதில் ஸந்தேகத்துடன் பிதாவாகியபிர்ம்மதேவனை அடைந்துவந்தநம்செய்து அருகில் வணக்கத்துடன்நின்று தன்மனதிலிருக்கிற தீர்த்தமாகாத்மிய விஷயமாகிய சந்தேகத்தைப்பற்றி பின்வருமாறு பிரச்சினம்செய்தார் பிர்ம்மதேவனே புண்ணியமாகிய பூமண்டலத்தில் வீக்ஷாரண்ணிய க்ஷேத்திரத்தில் ஹிர்த்தாபநாசநமென்னும் மஹாபுண்ணிய தீர்த்தத்தைக்கண்டேன் அதைக்கங்கைமுதலான மஹாதீர்த்தங்களிலும் உத்தமமானதென்று புலஹர்முதலியமுனிவர்கள் சொன்னார்கள் அப்படியே மூவுலகத்திலும் பிரசித்தமாயிருக்கிற அந்தஹிர்த்தாபநாசநதீர்த்தம் கங்கைமுதலிய தீர்த்தங்களிலும் அதிகமானதென்பதைப்பற்றி அடியேனுக்கு அருளிச்செய்யவேண்டுமென்று பிரார்த்திக்க, பிர்ம்மாவும், ஸ்வரூபம் குணம் முதலியவைகளால் அளவிடக்கூடாதவனும், எங்கும் வியாபித்தவனும, ஸர்வசக்தனும், தோன்றுதல் முதலியவிகாரங்களில்லாதவனும், எக்காலத்திலும்

సతతంసదాసమూ్రిపశోభినే । హృత్తాపనాశనస్యాస్యవక్ష్యేమాహా
త్మ్యముత్తమం । యేనాధిక్యమభూత్తస్యగంగాదిభ్యోపినారద। పురాకృ
తయుగేతాతప్రద్యుమ్నోనామనామతః । రాజాపరమధర్మాత్మాబభూ
వామితవిక్రమః। మనోస్స్వాయంభువస్యాసీద్వంశేమహాయశాః।
పుత్రాన్నలేభేరాజాసౌసంశయావిష్టమానసః । తపఃకర్తుంసమారేభే
తస్యతీర్థస్యరోధసి ।అనేకవర్షసాహస్రంతపస్తప్త్వాసుదారుణం । నలేభే
పుత్రసౌభాగ్యమతశ్చక్రేపునస్తపః । వామపాదస్యసహసాంగుష్ఠే
నభువస్థలం । నిపీడ్యనివసన్నేవశతవర్షంమహాతపః । తతోవిష్ణుర్మహా
తేజాశ్శంఖచక్రగదాధరః । గరుడస్కంధమారుహ్యజగామాస్యతపో
వనం । ఆగతోభగవాన్విష్ణుశ్శేషసాక్షాత్సనాతనః ।విశ్వస్యధాతాపురు
షఃపురస్తేపురుషోత్తమః । ఇత్యాకాశవచశ్శ్రుత్వాప్రద్యుమ్నఃప్రముదా
న్వితః।ఉన్మీల్యనేత్రేరాజర్షిర్దదర్శపురుషోత్తమం। ఉత్ఫుల్లపుండరీకాక్షం

---

ஸத்தாகவிளங்குகிற வனுமான ஸ்ரீமந்நாராயணனைத் தண்டமசமாப்
பித்து, சர்வோத்தமமான இந்தஹிருத்தாபநாசந தீர்த்தத்திற்கு எத
னால் கங்கை முதலிய தீர்த்தங்களைக் காட்டிலும் மேன்மை வந்ததோ,
அந்த மாஹாத்மியத்தைச் சொல்லுகிறேன், நாரதரே!கேளும், முன்
கிருதயுகத்தில் மஹாதருமாத்மாவும், மிகுந்தபராக்கிரமத்தை யுடை
யவனும், பிரத்யும்நன் என்னும் பெயரால் பிரசித்தனுமான அர
சன் இருந்தான், ஸ்வாயம் புவமனுவின் வம்சத்தில் ஜனித்துமஹா
கீர்த்திமானாக இருந்த இந்தபிரத்தியும்நமஹாராஜன், புத்திரனைப்பெ
றாமையால், இதுஎந்தப்பாபத்தினாலேயோ வென்று மனதில் சந்தேக
முடையவனாகி, அந்தஹிருத்தாபநாசந தீர்த்தத்தின் கரையில் தவஞ்
செய்ய ஆரம்பித்தான், மிகவும்கொடியதானதவத்தை அனேகம்ஆயி
யிரவருஷகாலம்செய்தும், புத்திரபாக்கியமுண்டாக வில்லை, பின்னும்
தன் இடதுகாலின் பெருவிரலால் பூமியில் நின்றுகொண்டு நூறுவர்
ஷகாலம் அருந்தவத்தைச் செய்கையில், ஸ்ரீமந்நாராயணன் மஹா
தேஜஸினால் விளங்கிக்கொண்டு சங்கசக்கிரகதா பாணியாய் கருடனு
டைய தோளிலேறி இந்தப்பிரத்தியும்நராஜனுடைய தபோவனத்
தைஅடைந்தார். அந்தக்காலத்தில் ஓய் ராஜனே! அநாதிபுருஷனாய்
புருஷோத்தமனாய், ஸகலபிரபஞ்சங்களையும்ஸ்ருஷ்டிக்கிறவனாய், ஞா
னபலைசுவர்யாதி ஷாட்குண்யபரிபூர்ணனாய் ஆச்சிருதஸம் ரக்ஷணத்
திற்காக எங்கும் வியாபித்து நிற்பவனாயிருக்கிற ஸ்ரீமந்நாராயணன்
உனக்கெதிரில் எழுந்தருளினார். என்று ஆகாயவாணியுண்டாயிற்று.
அதைக்கேட்டுப் பிரத்தியும்நமஹாராஜன் சந்தோஷித்து, கண்களை
த்திறந்து பார்க்கையில், எதிரில் கருடாரூடனாய், அலர்ந்தழகிய தாம
ரைஇதழ்போன்ற திருக்கண்களையுடையவனாய், நீருண்டமேகம் போ

వినతానందనేష్ఠితం । పీతకౌశేయవసనంనీలజీమూతవిగ్రహం । ప్రణ
మ్యమానంయోగీంద్రైస్సనకాద్యైస్సుభక్తికం । శంఖచక్రధరందేవంవ
రదాభయదాయినం । ప్రసన్నవదనందేవంప్రణతార్తిహరంవిభుం । దండ
వత్ప్రణనామాథసహసోత్థాయసంస్తుతిం । మూర్ధ్న్యంజలిముపాధా
యచక్రేకైటభవిద్విషః ॥ ప్రద్యుమ్నః ॥ నమస్తేపుండరీకాక్షనమస్తేవిశ్వ
భావన । నమస్తేస్తుహృషీకేశమహాపురుషపూర్వజ । త్వామేవవిశ్వాధా
తారమాహుర్వేదాస్సనాతనం । పరంబ్రహ్మపరంధామసనకాద్యాశ్చ
యోగినః । ముక్త్యైత్వామేవహృదయేధ్యాయంతిపరమేశ్వరం । త్వంకా
రణంసమస్తానాంకార్యంచాపిప్రగీయసే । పృథివ్యాపోగ్నిరాకాశో వా
యుశ్చైవాత్రపంచమః । త్వమేవసర్వలోకేశశ్రీనిధేవిశ్వభావన । అష్టా
ప్రకృతయోవిష్ణోత్వంసాంఖ్యైఃపరిగీయసే । యదదేశ్యంయదగ్రాహ్య
మచక్షుశ్శ్రోత్రముచ్యతే । నిత్యంసర్వగతంచైవసద్విభుస్త్వముదాహృ

---

ன்றதாகிக் கண்டபோதே தாபங்களைத்தணிப்பதாகிய திவ்யவிக்கிரஹ
த்தையுடையவனாய், பீதாம்பரதாரியாய், ஸநகாதியோகிகளால் பக்
தியுடன் சேவிக்கப்படுகிறவனாய், சங்கசக்கிரங்களையும், வராபயஹஸ்
தங்களையும், தரித்துக்கொண்டு அடியார்களுடைய சகலச்சிரமங்களை
யும் ஒழிப்பவனாய், ஸர்வசக்தனாய், பிரகாசிக்கிற ஸ்ரீமந்நாராயணனை
க்கண்டு, தண்டம்சமர்ப்பித்து, சீக்கிரமாக எழுந்திருந்து, தலைமேல்
கைகளைக்குவித்துக்கொண்டு ஸ்துதிசெய்தான். ஓபுண்டரீகாக்ஷனே!
உனக்குத்தண்டமசமர்ப்பிக்கிறேன், ஓஸகலபிரபஞ்சத்தையும்போஷி
க்கிறவனே உனக்குத்தண்டம் சமர்ப்பிக்கிறேன் ஹிருஷீகேசனே பு
ருஷோத்தமனே பிரபஞ்சத்திற்கு உபகாரம்செய்வதற்காக முற்கால
ங்களிலும் இப்படி அவதரித்தவனே அநாதிவஸ்துவாகிய உன்னையே
ஸகல வேதங்களும் பிரபஞ்சத்திற்குக் கர்த்தாவாகச்சொல்லுகின்ற
ன, பரப்பிர்ம்மமும் பரந்தாமனும்பரமேசுவரனுமாயிருக்கிற உன்னை
யே ஸநகாதியொகிகள் முக்திக்காக ஹிருதயத்தில் தியானிக்கின்றனர்
நீயே ஸகலபிரபஞ்சங்களுக்கும் காரணமாகவும் காரியமான அந்த
ப்பிரபஞ்சமாகவும்சொல்லப்படுகிறாய். பிருதிவி அப்பு தேஜஸ் வாயு
ஆகாசம் என்னும் பஞ்சபூதங்களும் நீயே. ஸர்வலோகேசனே! பெரிய
பிராட்டியாருக்கு நிதிபோன்றவனே ஸகலத்தையும் போஷிக்கிறவ
னே எங்கும்வியாபித்தவனான நீயேஸாங்கியர்களால் பிரகிருதி, மஹா
ன், அஹங்காரம், சப்த தந்மாத்திரம், ஸ்பர்சதந்மாத்திரம், ரூபதந்மாத்
திரம், ரஸதந்மாத்திரம், கந்ததந்மாத்திரம் என்கிற எண்பிரகிருதிரூபி
யாகச் சொல்லப்படுகின்றாய் எதுகண்களால் காண்பதற்கு அரிதான
தோ எது ஒரு இந்திரியங்களாலும் கிரஹிக்க அசாத்தியமானதோ எ
துகண் செவிமுதலிய இந்திரியங்களுமில்லாமலே நித்தியமும் பிரகா

తః। ఇతిసంస్తుత్యసర్వేశంవిష్ణుంహృద్గతమీశ్వరం। ప్రదక్షిణీకృత్యనృపః
ప్రణనామపునఃపునః । ఉవాచభగవాన్విష్ణుస్తంప్రసన్నేక్షణస్తదా।
స్వరేణమహతావిశ్వంపూరయన్నుదధిర్యథా । వరంవరయభద్రంతేప్ర
ద్యుమ్నతపసాతవ। సుదుశ్చరేణమహతాప్రీతోస్మ్యమితవిక్రమ॥ ప్రద్యు
మ్నః ॥ మమవంశకరాన్పుత్రాన్ప్రదేహికరుణాంబుధే । హృత్తాపనా
శనస్నానాద్భగవన్భక్తవత్సల । అద్యప్రభృతితీర్థంవైమమహృత్తాపనాశ
నాత్ । ఇదందేవహ్రదంభూయాన్నామ్నాహృత్తాపనాశనం । ఆవి
ర్భూతోయతోద్యత్వంపౌషదర్శేమమాధునా । అతోగంగాదితీర్థేభ్యో
భవతాదధికంత్విదం । ఇమాన్వరాన్స్వభక్తాయమహ్యందేహిజగత్ప్ర
భో । అదేయంనభవేత్కించిద్భక్తానామనుకంపయా ॥ శ్రీభగవానువా
చ ॥ యాన్వరాన్నృపశార్దూలయాచసేవైమదంతికాత్ । దుర్లభాం

---

சிக்கிற ஞானத்தையுடையதோ எதுகாலத்திரயத்திலு மிருப்பதாய்
சகலவஸ்துக்களிலும் உள்ளும் புறமும் வியாபித்திருப்பதாய் ஸத்தா
ன வஸ்துவாய் சொல்லப்படுகிறதோ அந்தவிபுவான வஸ்துவாகவும்
நீயேசொல்லப்படுகிறாய் என்றுஸ்துதிசெய்து ஸர்வேசுவரனும் தன
து ஹிருதயத்தில் அந்தர்யாமியாயிருப்பவனும் தனக்குஸ்வாமியுமா
ன விஷ்ணுவை பிரதக்ஷிணம்செய்து அடிக்கடித் தண்டம்சமர்ப்பித்
தான் அப்பொழுது எம்பெருமான் அந்தப்பிரத்தியும்னமஹாராஜ
னைக் கருணையோடு கடாக்ஷித்து உலகத்தைத் தன்முழக்கத்தினால்அ
டக்கிக்கொண்ட கடல்போல கம்பீரமான தன்ஸ்வரத்தினால் அதிக
பராக்கிரமசாலியான பிரத்தியும்னமஹாராஜனே உக்கிரமாகியஉன்
தவத்தினால் பிரஸன்னனானேன் உனக்குவேண்டும் வரங்களைக்கேட்டு
க்கொள் உனக்கு மங்களமுண்டாகக்கடவதென்று அருளிச்செய்யக்
கேட்டு பிரத்தியும்னமஹாராஜன் பிரார்த்தித்தான். கருணாநிதியே பக்
தவத்ஸலனே ஹிருத்தாபநாசநஸ்நானத்தினால்எனக்குவம்சத்தைவிரு
த்திசெய்கிறவர்களானபுத்திரர்களைக்கொடுத் தருளவேண்டும், எனது
ஹிருதயத்தில் புத்திரனில்லாமையினா லுண்டானதாபத்தை ஒழித்த
தீர்த்தமாகையால் இந்தப்புஷ்கரிணியானது இதுமுதல்ஹிர்த்தாபநா
சநமென்னும்பெயரால் பிரசித்தமாகக்கடவது. அடியேனுக்குப் பிர
ஸன்னராகி தேவரீர் இந்தத்தீர்த்தத்தின் கரையில் தை அமாவாஸ்யை
தினத்தில் ஸாந்நித்தியத்தைச்செய்தமையால் இந்தத்தீர்த்தம் கங்கை
முதலான ஸகலதீர்த்தங்களினும் சிரேஷ்டமாகவேண்டும், ஜகதீசுவர
னே!தேவரீருக்குபக்தனான அடியேனுக்கு இந்தவரங்களை அளித்தரு
ளவேண்டும். கருணையினால் பக்தர்களுக்கு கொடுக்கத் தகாதவரம் யா
துமிராதன்றோ என்று பிரார்த்திக்க ஸ்ரீபகவான் அருளிச்செய்கிறார்
பிரத்தியும் நமஹாராஜனே என்னிடத்தில் நீஎந்தவரங்களைப் பிரார்

స్థానమేహిత్వంమత్ప్రసాదాత్త్వమాప్నుహి ॥ బ్రహ్మో ॥ ఏవముక్తోభగవతాప్రద్యుమ్నోమునిసత్తమ । యథాగతంజగామాశుపుత్రాన్ లేభేసుదుర్లభాన్ ॥ అతోగంగాదితీర్థేభ్యోహ్యాధిక్యంభగవత్కృతం । అస్యతీర్థస్యవైపుత్రనాత్రకార్యావిచారణా ॥ శ్రీశాలిహోత్రః ॥ ఇతిధాతుర్వచశ్శ్రుత్వానారదశ్ఛిన్నసంశయః । చచారచయథాకామంభగవన్న్యస్తమానసః । ఏతత్తేసర్వమాఖ్యాతంయన్మాంత్వంపరిపృచ్ఛసి । హృత్తాపనాశనస్యాసీద్గంగాధిక్యంయథాపురా । యఇదంశృణుయాన్నిత్యంతీర్థమాహాత్మ్యముత్తమం । సయాతిపరమంస్థానంలబ్ధ్వాపుత్రానసుత్తమాన్ ॥

ఓం॥ ఇతిశ్రీమార్కండేయపురాణే క్షేత్రకాండే తీర్థమాహాత్మ్యే హృత్తాపనాశనతీర్థస్య గంగాతీర్థాధిక్యాదివైభవకథనంనామషడుత్తరశతతమోధ్యాయః.

---

த்திக்கிறாயோ அவைகள் துர்லபங்களென்று நீ அறியவேண்டும் ஆகிலும் அவைகளை என்னுடைய அநுக்கிரகத்தினால் நீ அடையக்கடவைஎன்று எம்பெருமான் பிரத்தியும்நனை அநுக்கிரகித்தார்.

நாரதரே அந்தப்பிரத்தியும்நன் துர்லபர்களான மக்களைப்பெற்று மகிழ்ந்தான் அதனால் அந்தத்தீர்த்தத்திற்குக்கங்கைமுதலிய தீர்த்தங்களைக்காட்டிலும் மேன்மையானது எம்பெருமானால் உண்டாக்கப்பட்டது. இதில் சந்தேகித்து விசாரிக்கவேண்டியது யாதுமில்லை என்று சதுர்முகன் அறுதியிட்டான். தேவபாகமுனிவரே இவ்விதமாக நான்முகன் தெளிவிக்க நாரதமுனிவர் மனக்கலக்கமற்றவராகி ஸ்ரீவீரராகவனிடத்தில் நிலைநின்ற மனதையுடையவராய் தன்னிச்சைபோல் சஞ்சரித்தார். ஆகையாலிந்த ஹிர்த்தாபநாசந தீர்த்தத்திற்குக் கங்கையிலும் அதிகமாகிய மாஹாத்மியமுண்டான விதத்தை நீர்கேட்டப்படி முழுதும் உமக்குச்சொன்னேன் எவனிந்த ஹிர்த்தாபநாசநதீர்த்தத்தினுடைய உத்தமமான மாஹாத்மியத்தை நித்தியமும் கேட்கிறானோ அவன் இங்கு உத்தமகுமாரர்களைப்பெற்று வாழ்ந்து உத்தமமான ஸ்த்தாநத்தை அடைகிறான்என்று ஸ்ரீசாலிஹோத்திரர் அருளிச்செய்தார்.

ஸ்ரீமார்க்கண்டேயபுராணத்தில் க்ஷேத்திரகாண்டத்தில் தீர்த்தமாஹாத்மியத்தில் உருத்திரனது பிரமஹத்தி விமோசநத்தையும் பிரத்யும்நனுக்கு புத்திரவரமளித்ததையும் தைஅமாவாஸ்யை தினத்தில்தீர்த்தமகிமையையும் சொல்லுகிற நூற்றாறாவது அத்தியாயம் முடிந்தது.

సప్తమాధ్యాయప్రారంభః.

ఓం॥ దేవభాగః ॥ శ్రుతంతీర్థస్యమాహాత్మ్యంవిస్తరేణమయాధునా । యథాభగవతస్త్వత్తోజ్జగత్సృష్టింవదస్వమే ॥ శ్రీశాలిహోత్రః ॥ జగత్సృష్టింప్రవక్ష్యామియథాతత్త్వేనమేశ్రుణు। ఆసీదిదంతమోభూతంజగత్ప్రళయలక్షణే ॥ కాలేమహతివిప్రేంద్రనాస్తిసంజ్ఞాసమన్వితం । తతస్సిసృక్షుర్భగవాన్కరుణావిష్టమానసః ॥ ఆదౌససర్జసలిలంవిష్ణుఃపంకజలోచనః । తత్రవీర్యంవినిక్షిప్తంతదండంసమజాయత।తతశ్చతుర్ముఖోజజ్ఞేతస్మాదాసీదిదంజగత్ । ఆదిసర్గంప్రవక్ష్యామివిష్ణోర

---

## ஏழாவது அத்தியாயம்.

தேவபாகமுனிவர் ஸ்ரீ சாலிஹோத்திர முநிவரை நோக்கிசுவாமி! தீர்த்தமாஹாத்மியத்தை உம்மிடத்தில் விஸ்தாரமாகக்கேட்டேன். பகவானிடத்திலிருந்து இந்தப்பிரபஞ்சம் உண்டான ஸ்ருஷ்டியின் கிரமத்தை அடியேனுக்கு அருளிச்செய்யவேண்டுமென்று பிரார்த்திக்க ஸ்ரீ சாலிஹோத்திரரும், தேவபாகரே! ஜகத்தின் ஸ்ருஷ்டிக்கிரமத்தைத்தத்துவமாகச்சொல்லுகிறேன் கேளும், இப்பொழுது பரந்தபூமியாகவும், பெருமலையாகவும், அலைகடலாகவும், பற்பலபிராணிகளாகவும், விசித்திரமாகக்காணப்படுகிற இந்தப்பிரபஞ்சமானது, மஹாபிரளயகாலத்தில், மண்குடம் அழியும்போது தன்காரணமாகிய மண்ணுருவத்தை அடைவதுபோலே, மஹத்தத்துவம், அஹங்காரதத்துவம், தந்மாத்திரைகள், பஞ்சபூதங்கள், முதலானஸகல்கார்யவர்க்கத்திற்கும் மூலகாரணமாய், மிகவும் ஸூக்ஷ்மதசையைப் பெற்றதாய், தமஸ்என்னும் பெயர்பெற்றிருக்கிற மூலப்பிரகிருதியில் லயித்து அதினுருவத்தை அடைந்து இப்போதிருக்கிற பிரபஞ்சதசைமாறி இருக்கையால் நாஸ்திஎன்னும் பதத்திற்குப்பொருளாகியாதுமில்லை என்னும்படி இருந்தது. அப்பொழுது ஜ்ஞானசக்திமுதலிய ஆறுமஹாகுணங்களையுடையவனான ஸ்ரீமந்நாராயணன் கரணகளேபரங்களற்று அசேதநத்தைக்காட்டிலும் வேறுபாடில்லாமல் போகமோக்ஷங்களைப்பெறுவதற்குச் சக்தியில்லாமலிறகு ஒடிந்தபக்ஷிபோல்கிடக்கிற சேதநங்களிடத்தில் கருணையினால் அவர்களுக்குக் கரணகளேபரங்களைஅவரவர் கருமபலத்திற்கிடாகஸ்ருஷ்டித்துக்கொடுத்துத்தம்மைஆராதிக்கச்செய்துநற்கதியைஅடைவிக்கத்திருவுளங்கொண்டுஆதியில் ஜலத்தை ஸ்ருஷ்டித்து அந்த பிரகிருதியில் ஸகலஜீவராசியாகிய வீர்யத்தை ஆவேசிப்பித்து பஞ்சபூதங்களையும் ஸ்ருஷ்டித்துப் பஞ்சீகரணவிதியாலே அண்டத்தை ஸ்ருஷ்டித்தான். பின்பு அண்டாதிபதியான சதுர்முகனை ஸ்ருஷ்டிசெய்து அவரை ஆவேசித்துநின்றும் அவருக்கு வேதங்களை உபதேசித்தும் அவர்முகமாக இந்தவ்யஷ்டிஸ்ருஷ்டியைச் செய்தருளினான். பின்னும் அளவற்ற தேஜஸை

మితతేజసః । క్షోభయామాస సంప్రాప్తే ప్రకృతిం విష్ణురవ్యయః । సర్గకాలే జగద్యోనిరయోనిర్వై నిరంజనః। ప్రకృతేస్తు మహానాసీత్ క్షుబ్ధాయా అథ విష్ణునా॥ అహంకారస్తతో జజ్ఞే త్రివిధో యముదాహృతః। వైకారికస్తైజసశ్చ తామసశ్చేతి భేదతః । వైకారికాత్సాత్వికాద్వై దశదేవాః ప్రజజ్ఞిరే । శ్రోత్రం స్పర్శననేత్రే చ రసనాఘ్రాణమేవ చ । వాక్పాణీ చ తథా పాదౌ పాయూపస్థౌ చ తాన్విదుః । ఏకాదశేంద్రియం చాత్ర మనస్తు పరికీర్తితం । ఇమాంస్తు విషయాంస్తేషామాహ పౌరాణికో జనః । శబ్దస్పర్శరూపే చ రసగంధౌ తథైవ చ। ఉక్తిశ్శిల్పం గతిం చాపి విసర్గం చ రతిం తథా । ఆహుస్సాహాయ్యకం తేషాం మనసః కర్మ కేవలం । ఇతి వైకారికీ ప్రోక్తా సామాన్యేన మయాధునా । అహంకారాత్తామసాద్వై పంచభూతాని జజ్ఞిరే । పృథివ్యాపస్తథా తేజో వాయురాకాశ ఏవ చ । గంధో

---

யுடையவனாகிய ஸ்ரீவிஷ்ணுவினுடைய ஆதிஸ்ருஷ்டியை விஸ்தாரமாகச் சொல்லுகிறேன். ஸகலஜகத்திற்கும் காரணபூதராய், தனக்கு ஒருகாரணமில்லாதவராய்கர்மாநுகுணமாகச்சேதநருக்குப்பலன்களைத்தருகிறவராகையாலே வைஷம்யம் முதலிய தோஷங்களற்றவராய் எக்காலத்திலும் விகாரமில்லாதவராய் இருப்பவராகிய ஸ்ரீ விஷ்ணுவானவர் ஸ்ருஷ்டிகாலத்தில் குணங்களின் ஸாம்யதசையைப்பெற்றிருக்கிற மூலப்பிரகிருதியில், குணவைஷம்யதசையைத் தம்ஸங்கல்பத்தினால் தோற்றுவித்தார் அவ்விதமாக விகாரப்பட்ட பிரகிருதியினின்றும், மஹத்தத்துவமும், அதினின்றும் அஹங்காரதத்துவமும்,உண்டாயின அந்த அஹங்காரதத்துவமானது, வைகாரிகம்,தைஜஸம், தாமஸம் என்று மூன்றுவிதமாயிருந்தது, அவைகளில் ஸத்துவகுணத்தை முக்கியமாகப்பெற்றதாகிய வைகாரிகமென்கிற அஹங்காரத்தினின்றும், ஞானேந்திரியங்கள் கருமேந்திரியங்கள்என்னும் பத்து இந்திரியங்கள் உண்டாயின. அவைகள் சுரோத்திரம்,நேத்திரம்,த்வக்கு, கிராணம்,நாவுஎன்னும் வாக்கு, பாணி,பாதம், பாயு,உபஸ்தம்என்றும் சொல்லப்படுகின்றன. சகல இந்திரியங்களுக்கும் சகாயமாகி இருக்கிறமனத்துடன் பதினொறுஇந்திரியங்கள் முனிவர்களால்சொல்லப்பட்டன அந்த இந்திரியங்களுக்கு சப்தம், ரூபம்,ஸ்பர்சம்,கந்தம்,ரஸம் என்றும் சொல்லுதல், தொழில்,நடை, சரீரமலங்களை விடுதல்,ஆநந்தம் என்னும் விஷயங்கள் பௌராணிகர்களால் சொல்லப்பட்டன.இவைகளுக்கு மனத்தின்தொழில்சகாயமாகிறது. இவ்விதமாக ஸாத்துவிகமான வைகாரிக அஹங்காரத்தின் ஸ்ருஷ்டியானது ஸாதாரணமாகச் சொல்லப்பட்டது. தமோகுணத்தை முக்கியமாக உடையதாகிய தாமஸாஹங்காரத்தினின்றும் பிருதிவி,அப்பு,தேஜஸ்,வாயு, ஆகாசம் என்னும் பஞ்சபூதங்களும் உண்டாயின.

రసశ్చరూపంచస్పర్శశ్శబ్దశ్చతద్గుణాః । అహంకారస్తైజసస్తుసాహా-
య్యంకురుతేద్వయోః । వైకారికస్యచేంద్రియభూతాదేస్తామసస్యచ।
ఏవంచతుర్విధాప్రోక్తాసృష్టిర్వైప్రకృతేఃపునః । పంచవింశంచపురు-
షంషడ్వింశంపురుషోత్తమం । ఆహుస్తత్త్వవిదోవిప్రాఃకాలతత్వంత-
థాన్యకం । ఏవంప్రధానసృష్టిర్వైమయాప్రోక్తాద్విజోత్తమ।మహేశ్వ-
రవిధాతారౌజగత్సర్వంచరాచరం । యస్యసృష్టింప్రశంసంతిపరస్మై
బ్రహ్మణేనమః । భక్తానుకంపీభగవాన్క్రీడార్థంమధుసూదనః । జగ-
త్సృజత్యవతిచసంహరత్యేకయత్స్వయం। ఏవంక్రీడాపరోదేవోహ్యప్ర-
మేయోఽవినిర్జితః । భూతైఃప్రమోదతేవిష్ణుర్మాయయామోహయన్

---

இந்தமஹாபூதங்களுக்குக் கிரமமாக கந்தம்,ரஸம், ரூபம், ஸ்பர்சம், சப்தம் என்னும் குணங்கள் சொல்லப்பட்டன இந்திரியகாரணமான வைகாரிகாஹங்காரத்திற்கும் பூதகாரணமான தாமஸாஹங்காரத்திற்கும் தைஜஸாஹங்காரமானது ஸகாயமாகி இருக்கிறது இப்படி இந்திரியஸ்ருஷ்டி,ரூபம்முதலிய விஷயங்களின் ஸ்ருஷ்டி,பஞ்சபூதஸ்ருஷ்டி,அவைகளின குணங்களின் ஸ்ரூஷ்டிஎன்று பிரகிருதியின் ஸ்ருஷ்டியானது நான்குவிதமாகச் சொலலப்பட்டது. ஸகலத்திற்கும் காரணமாகிய மூலப்பிரகிருதிஒன்று,மஹத்தத்துவம்,அஹங்காரதத்துவம்,தன்மாத்திரைகள் ஐந்து,ஆக எட்டு,கருமேந்திரியங்கள் ஐந்து, ஜ்ஞானேந்திரியங்கள் ஐந்து,மனதுஒன்று, பிருதிவிமுதலிய பூதங்களைந்து,ஆகபதினாறு,மூலப்பிரகிருதி முதலாக இருபத்துநான்கு, இந்த இருபத்துநான்கு தத்துவங்களுக்கும் மேல் புருஷனாகிய ஜீவனை இருபத்தைந்தாவது தத்துவமாகவும் இவைகளுக்கு அந்தர்யாமியாக இருக்கிறபுருஷோத்தமனை இருபத்தாறுவது தத்துவமாகவும் இவைகளைக்காட்டிலும் காலதத்துவத்தை வேறுதத்துவமாகவும் ரிஷிகள்சொல்லுகின்றனர். சராசரங்களை ஸம்ஹரிக்கவும் ஸ்ருஷ்டிக்கவும் அதிகாரிகளான சிவனும் சதுர்முகனும் மற்றும்ஸகலரும் எவன்செய்கிற ஸ்ருஷ்டியைப்புகழ்கின்றனரோ அந்தப்பரப்பிர்ம்மத்திற்குவந்தனம்செய்கிறேன் பரிபூர்ணனாகியதனக்கு உலகத்தைஸ்ருஷ்டிசெய்வதினால் பிரயோஜனமில்லாவிடினும் பக்தரை அநுகிரகிக்கத்திருவுளங்கொண்டு ஸ்ரீமதுசூதனன் இந்தப்பிரபஞ்சத்தை ஸ்ருஷ்டித்தலும் பரிபாலித்தலும் ஸம்ஹரித்தலும் ஆகிய இவ்விதமான லீலைகளைச்செய்துகொண்டு மஹிமையினால் அளவிடக்கூடாதவனும் சத்துருக்களுக்கு ஜயிக்க அரியனுமான விஷ்ணுவானவர் பிரகிருதியாகிய தன்மாயையினால் பிரபஞ்சத்தை மோஹிக்கச்செய்துகொண்டு பிரபுவானவன் பந்துமுதலியவைகளைக்கொண்டு கிரீடித்துச்சுகிப்பது போல்தாம்ஸ்ருஷ்டிசெய்த பூதங்களால் லீலாரஸத்தை அநுபவிக்கிறான் மது

జగత్ । యేభజంతితుతంభక్త్యాభగవంతంమధుద్విషం। తయాయుక్తాః ప్రాప్నువంతితద్విష్ణోఃపరమంపదం।చిదచిత్ప్రభుతత్త్వజ్ఞాఃయోగశాస్త్ర విశారదాః । విష్ణుంప్రపన్నాభక్తాశ్చప్రాప్తంతైర్జన్మనఃఫలం । తథా భగవతాగీతావిష్ణునాప్రభవిష్ణునా । దైవీహ్యేషాగుణమయీమమమా యాదురత్యయా । మామేవయేప్రపద్యంతేమాయామేతాంతరంతితే। నవైముచ్యతి నోమూఢా అన్యదేవపరాయణాః । ముక్తింప్రయాంతివి ప్రేంద్రకల్పకోటిశతైరపి । విధూతకల్మషాఃకేచిత్ విష్ణుభక్తావిమత్సరాః। పరస్పరంబోధయంతితుష్యంతిచరమంతిచ । విష్ణుభక్తివిహీనస్యబ్రాహ్మ ణస్యవిశేషతః । సంవర్తఃపరిహర్తవ్యోయతఃపాపంభవేన్నృణాం।య

---

வென்னும் அசுரனைக்கொன்று நான்முகனுக்கு நன்மதியை அளித்தருளி அவனால் உலகத்தை நல்வழியில் நிறுத்தின கருணாநிதியான ஸ்ரீமந்நாராயணனைப் பக்தியினால் எவர்களுபாசிக்கின்றனரோ அவர்கள் அந்தவிஷ்ணுமாயையாகிய பிரகிருதியினின்றும் விடுபட்டவர்களாகி விஷ்ணுவின் பரமபதத்தைப் பெறுகின்றனர் சேதநம் அசேதநம் ஈசுவரன் ஆகிய இம்மூன்றுதத்துவங்களையும் உள்ளபடி அறிந்தவர்களாகி தேகமே ஆத்மாஎன்கிற பிரமத்தையும் தானே ஈசுவரன் என்கிற பிரமத்தையும் ஒழித்து தேகம் இந்திரியம் மனம் பிராணன் புத்தி இவைகளைக்காட்டிலும் வேறாகி ஜீவன் இருபத்தைந்தாவது தத்துவமாகிறானென்றும் இவைகளுக்கு வேறுபட்டவனாய் இருபத்தாறாவது தத்துவமாகியிருக்கிற புருஷோத்தமன் ஜீவனுக்கு ஸ்வாமி என்றும் நிச்சயித்து அவனை தாஸனான ஜீவன் அடைவதற்கு உபாயங்களாக விதிக்கப்பட்டிருக்கிற பக்தி பிரபத்தி சாஸ்திரங்களைக்கற்று அதின் அர்த்தங்களைக் குருமுகத்தால் அறிந்து எவர்கள் பக்தியினாலோ பிரபத்தியினாலோ பஜிக்கின்றனரோ அவர்களே பிறவிப்பயனைப்பெற்றவர்கள். தேவபாகரே ! அப்படியே ஸ்ரீகண்ணபிரான் கீதையில் அர்ஜுநனைநோக்கி அர்ஜுநா ஸத்துவம் ரஜஸ் தமஸ்என்னும் முக்குணங்களின் ஸ்வரூபமாகியும் லீலையைச்செய்கிறவனாகிய என்னால் லீலைக்குஸாதநமாக அங்கீகரிக்கப்பட்டதாகியும்இருக்கிறஇந்தப் பிரகிருதி என்னும் மாயையானது ஒழிக்க ஒழியாதது, ஆனால் என்னையே ஸகலவிதகதியாக நம்பி எவர்கள் சரணமடைகின்றனரோ அவர்கள் இந்தமாயையைக் கடக்கின்றனரென்று பரமரஹஸ்யவழியை உபதேசித்தானன்றே, அநாதிபாபவாஸனையினால் தீவினைகளைச்செய்கிற மூடர்களாகி பரதேவதையாகிய ஸ்ரீமந்நாராயணனைவிட்டு இதரதேவதைகளை உபாசிக்கிறவர்கள் கல்பகோடிகாலங்களிலும் முக்தியை அடைகிறதில்லை, சிலவிஷ்ணுபக்தர்கள் மாத்ஸரியமில்லாதவர்களாகியும் ஒருவிதகல்மஷமு மில்லாதவர்களாகியும் ஒருவர்க்கொருவர்பரமாத்மஸ்வரூபத்தைத்தெளிவிக்கிறவேதாந்த சாஸ்திரார்த்தங்

దిపశ్యతివిప్రేంద్రపురుషంవీతమత్సరం । విష్ణుభక్తోమహాయోగీసముక్త
స్సర్వథైవహి । కృత్వాపిసుకృతంసర్వమశ్వమేధాదికంజనః । యదిభా
గవతస్యాగఃకుర్యాత్సాస్యదేవకిల్బిషీ । విద్యావినయసంపన్నాబ్రాహ్మ
ణావేదపారగాః । విష్ణుభక్తింనకుర్వంతితేహిచండాళసన్నిభాః । విష్ణు
భక్త్యైవసతతంవసిష్ఠాద్యామహర్షయః । తీర్ణాస్సంసారవారాశిమపారం
మునిసత్తమ । తత్కర్మకృత్తత్పరమస్తద్భక్తస్సంగవర్జితః । తద్భక్తభ
క్త్యాయుక్తస్త్వంతత్సాయుజ్యమవాప్స్యసి । విశుద్ధసత్త్వవిదితాత్మత
త్త్వోనివిష్టచిత్తోభగవత్యుపేంద్రే । స్వదృష్టిపాతేనపునాతిలోకాన్

---

களைப் போதிக்கின்றனர் அதனால் மிகுந்தசந்தோஷத்தை அடைகின்றனர் பரமாத்மாவான ஸ்ரீ மந்நாராயணனிடத்திலே ரமிக்கின்றனர் தேவபாகரே விஷ்ணுபக்தி இல்லாதபிராம்மணனுடைய ஸஹவாஸத்தை அவசியம்விட்டு விடவேண்டும் அதனால் பகவான் விஷயமாகச்செய்யத்தக்க பக்திக்குவிரோதியான பாபமானது மனிதர்களுக்கு சம்பவிக்குமன்றோ மாத்ஸர்யமில்லாத ஒருபுருஷனை ஸ்ரீவிஷ்ணுபக்தனான மஹாயோகியானவன் குளிரப்பார்த்தானாகில் அந்தக்கடாக்ஷமகிமையினால் அவன்முக்தியை அடைகிறான் ஒருவன் அசுவமேதம் முதலாகிய மஹாபுண்ணியகருமங்களை அநுஷ்டித்தவனாக இருக்கினும் ஸ்ரீவைஷ்ணவனுக்கு அபராதம் செய்தானாகில் அவன்பாபியாகிறான் சகலவித்தியைகளிலும் அப்பியாசத்தையும் விநயத்தையும் நன்றாகப்பெற்று வேதசாஸ்திரங்களை ஓதி அதின் அர்த்தங்களில் தெளிந்தவர்களாகிய பிராம்மணர்களாக இருக்கிலும் ஸ்ரீவிஷ்ணுவினிடத்தில் பக்தியைச்செய்யாதவர்களாகில் அவர்கள் சண்டாளனுக்குச்சரியானவர்களே வசிஷ்டர்முதலான மஹாரிஷிகளும் ஸ்ரீவிஷ்ணுபக்தியினாலன்றோ தாண்டுவதற்கு அரிதாகிய ஸம்ஸாரமென்னும் பெருங்கடலையும் கடந்தனர் ஆகையால் தேவபாகரே நீரும் ஸ்ரீவிஷ்ணுவின் ஆராதநரூபங்களாகச் சகலகருமங்களைச்செய்தும் அவரையே பரமகதியாகப்பற்றியும் ஸ்ரீவிஷ்ணுவுக்கே பக்தனாகியும் விஷயப்பற்றைஒழித்தும் ஸ்ரீவிஷ்ணுபக்தர்களிடத்தில் விஷ்ணுவினிடத்தில் போலே மஹாபக்தியைச்செய்தும் இருந்தீராகில் நீர்பிராரப்தகருமத்தின் முடிவில் ஸ்ரீவிஷ்ணுஸாயுஜ்யத்தை அடைவீர் பரிசுத்தமானஸத்துவகுணத்தைப்பெற்று ஆத்மதத்துவத்தைச்சரீரம்இந்திரியம்முதலியவைகளைக்காட்டிலும்வேறுபட்டதாகியும்ஸ்ரீமந்நாராயணனுக்கே சேஷபூதமாகவும் அவனுக்கே பராதீநமாகவும ஜ்ஞானஸ்வரூபமாகவும் ஜ்ஞாநத்தைகுணமாகஉடையதாகவும் அறிந்தும் இந்திரனுக்கு பிராதாவாக அவதரித்து பலிசக்கிரவர்த்திஅபஹரித்துக்கொண்டிருந்தராஜ்யத்தைமீட்டு இந்திரனுக்குக் கொடுத்து உபகரித்த கருணாநிதியாகிய பகவானிடத்தில்நிலைநின்றமனத்தை உடையவராகியும்

స్ఖలద్గతిర్బ్రహ్మవిచింతయానః । యాన్యస్యపాపానిసముత్థితానిభవంతి
పూర్వంసముపార్జితాని। యాన్యేవతాన్యాశులయంతథాగ్నౌయథైషి
కాతూలముపైతివిప్ర। విశుద్ధభావావిహగేంద్రకేతౌనిరుద్ధచిత్తాఃఖలుయ
ద్విశంతి । తమేవసర్వేప్రవదంతివేదాః తేభ్యఃప్రణామంకురురాజవర్య।
తద్భక్తపూజాఖలుతస్యవిష్ణోఃపూజావితానంహ్యతియాతినూనం । అత
స్త్వమప్యస్యకురుష్వపూజాంపదాశ్రితానాంప్రణతార్తిహంతుః॥నహీం
ద్రలోకంనయమస్యలోకంనచాన్యలోకంనచతుర్ముఖస్య । ప్రయాంతి
తేకేవలమేవవిష్ణోఃపరంపదంతత్ఖలుభక్తియుక్తాః । కరోషియద్యద్ధిజు
హోషియచ్చదదాసియత్త్వంవిమలాత్మబుద్ధిః। నిత్యంయదశ్నాసితప
స్యసీదంతదర్పణంసాధుకురుష్వతాత । తద్భక్తియుక్తోవిషయేషుతృష్ణాం

---

பிர்மமத்தையேதியாநிக்கிறவராகியும்அதனால் பித்தனென்று பிறர்கூ
ரும்படி சிலநடைகளில்தடுமாறினவராகியும்இருக்கிற மஹாபுருஷன்
தனது பார்வையினால் ஸகல ஜநங்களையும பரிசுத்தர்களாகச் செய்கி
றார் பின்னும் இப்படி ஸ்ரீவிஷ்ணுவை இடைவிடாமல் உபாசிக்கிற
மஹாபுருஷனுக்கு பூர்வஜன்மங்களில் சம்பாதித்த பாபங்களனைத்து
ம் தீயில்பட்ட தூசுபோல் நசிக்கின்றன. கருடத்துவஜனாகிய எம்பெரு
மானிடத்தில்நிலைநின்றமனத்தையுடையார்களும்அந்தக்கரணசுத்தியு
டையார்களுமான மஹாபாகவதர்கள் எந்தஸ்தாநத்தை அடைகின்ற
னரோ அதையேவேதங்களும் புகழுகின்றன, ஆகையால் அப்படி
ப்பட்டபெரியோர்களை நீர்வந்தநம் செய்யும், எம்பெருமானுடைய
திருவாராதநத்திலும் அவனடியார்களைப் பூஜிப்பது எம்பெருமானு
டைய உகப்பையும், பாகவதர்களுடைய உகப்பையும் செய்வதாகி
விசேஷித்ததாகையால் சரணமடைந்தவர்களுடைய ஸகலவினைகளை
யும் ஒழித்து ரக்ஷிப்பதற்காகஎங்கும் வியாபித்து விளங்குகிற ஸ்ரீமந்
நாராயணனுடைய திருவடிகளைநீரும் ஆராதியும், ஸ்ரீ விஷ்ணுபக்தர்
கள், இந்திரலோகம், யமலோகம், பிர்மமலோகம், மற்றும் தேவர்க
ளுடையலோகம் ஆகியஇவ்வுலகங்களை அடைகிறதில்லை. அந்தப்பர
மபதத்தையேபெறுகிறார்கள். தேவபாகரே, நீர் எதைச்செய்கிறீரோ
எதைஹோமம் செய்கிறீரோ, எதைத்தருகிறீரோ, எதைப்புசிக்கிறீ
ரோ, எந்தத்தவத்தைச் செய்கிறீரோ. அவைகளை எல்லாம்யான்செய்
கிறேன் என்கருமமென்கிற அஹங்காரமமகாரங்களில்லாமல் நிர்ம
லமானமனம், புத்திஇவைகளோடு ஸ்ரீ விஷ்ணுவினிடத்தில் சமர்ப்
பித்துவிடும. எம்பெருமானிடத்தில் மிகுந்த பக்தியோடுகூடினவ
ராகி அல்பங்களும் அஸ்திரங்களும், துக்கமூலங்களுமாகி இருக்கிற
விஷயசுகங்களில் இச்சையைவிட்டுஎம்பெருமான் எமக்குஸ்வாமியெ
ன்றும் அவனுக்கு நாம்தாஸரென்றும், தியானத்தையே இடையறு

ఃవ_ర్తయతద్యోగయుతోనువేలం । స్వధర్మయుక్తఃప్రణమం స్తమేవపాప్రాప్య పియ_త్తద్యతయోవిశంతి॥ ఓం॥

ఇతిశ్రీమార్కండేయపురాణే క్షేత్రకాండే వీక్షారణ్య
మాహాత్మ్యేభగవత్కృతజగత్సృష్టికథనంనామ
సప్తోత్తరశతతమోధ్యాయః.

---

అష్టమాధ్యాయప్రారంభః.

శ్లో॥ దేవభాగః॥ విష్ణుభక్తస్యయఃకుర్యాదపరాధంద్విజోత్తమ। సపాపాత్మాభవత్యేవేత్యుక్తోభగవతాధునా । కోవాదృష్టోహిభవతావదతంతత్వతోమమ ॥ శాలిహోత్రః ॥ భగవద్భక్తియుక్తస్యఇక్ష్వాకోర్వంశజస్యచ । అంబరీషస్యదుర్వాసాఃకృత్వాగఃప్రాప్తవాంస్తుయత్। వక్ష్యేకథయామ్యద్యశృణువిప్రసభక్తికం । అంబరీషస్తురాజర్షిశ్శీల

మல் செய்துகொண்டு தனக்குரியதருமங்களைவிடாமல் அநுஷ்டித்துக் கொண்டு அவனையே சரணமாகப்பற்றிப் பிராணமங்களைச் செய்வீராகில்யதிகளடையும் மஹாஸ்த்தாநமாகிய ஸ்ரீவைகுண்டத்தையே அடைவீரென்று ஸ்ரீ சாலிஹோத்திரமுனிவர் அருளிச்செய்தார்.

ஸ்ரீமார்க்கண்டேய புராணத்தில் க்ஷேத்திரகாண்டத்தில் வீக்ஷாரண்ணியமாஹாத்மியத்தில்எம்பெருமான் செய்தருளுகிற பிரபஞ்சஸ்ருஷ்டியைச்சொல்லுகின்ற நூற்றேழாவது அத்தியாயம்முடிந்தது.

---

## எட்டாவது அத்தியாயம்.

தேவபாகர் ஸ்ரீ சாலிஹோத்திரமுனீந்திரரை நோக்கிசுவாமி! ஸ்ரீ விஷ்ணுபக்தனுக்கு எவன் அபராதம்செய்கிறனோ அவன்மஹாபாபியாகிறனென்றுமுன் அருளிச்செய்தீரன்றோ அப்படிஅபராதம் செய்து பாபியான புருஷனை எனக்கு உண்மையாகச்சொல்லவேண்டும், என்று பிரார்த்திக்க, சாலிஹோத்திரர் அருளிச்செய்தார். தேவபாகரே, பகவானிடத்தில் மஹாபக்திசெய்கிறவரும் இக்ஷ்வாகுமஹாராஜனுடையவம்சத்தில் அவதரித்தவருமாகிய அம்பரீஷமஹாராஜனுக்கு அபராதத்தைச்செய்து கோபிஷ்டராகியதுர்வாஸ முனிவர் அடைந்தகதியை உமக்குச் சொல்லுகிறேன் பக்தியுடன்கேளும்

వాన్భగవత్ప్రియః । సత్యసంధోజితక్రోధోదాంతశ్శత్రునిబర్హణః।
ఏకాదశీవ్రతపరస్సదా భాగవతప్రియః । త్రిషులోకేషువిఖ్యాతోబభూవా
తులవిక్రమః । తస్మింశ్చరతిరాజర్షావంబరీషేమహాత్తపః। తస్యాశ్రమం
ప్రతియయౌదుర్వాసాస్తాపసోత్తమః॥ రాజర్షిస్తమవేక్ష్యైవమునింసత్వ
రముత్థితః। ప్రణమ్యార్ఘ్యంతతోదత్వాసభక్తికమువాచహ॥అంబరీషః॥
దుర్వాసఃకల్పయామ్యద్యద్వాదశ్యాంభవతోమునే। ఆతిథ్యంవైనదీంగ
త్వాస్నాత్వాగచ్ఛమహామునే । ద్వాదశ్యతిక్రమేదోషఃపారణాయాం
విధీయతే। యథానాతిక్రమేదేషాపారణాయాంతథాకురు ॥ దుర్వా
సాః॥ రాజన్నేవ్రతలోపంతునకరిష్యామితేపునః। ఆగమిష్యామ్యహంశీఘ్రం
స్నాత్వాత్రిస్రోతసిక్షణాత్ ॥ శ్రీశౌలిమాహాత్రః ॥ ఏవముక్త్వామహా
యోగీదుర్వాసావైమహానదీం । గత్వారాజర్షివర్యస్యవ్రతలోపచికీ
ర్షయా।అత్వరన్నాచరత్స్నానంతథామాధ్యాహ్నికీంక్రియాం ।అథాం

---

அம்பரீஷனென்னும்ராஜரிஷியானவர்சீலவானும்,பகவானுக்கு பிரியரும், ஸத்தியஸந்தரும், கோபத்தைஜயித்தவரும், இந்திரியங்களை ஜயித்தவரும், சத்துருக்களை ஒழிப்பவரும்,விரதங்களில் சிரேஷ்டமாகிய ஏகாதசியில் சுத்தோபவாஸவிரதத்தை அநுஷ்டிப்பவரும், பாகவதர்களிடத்தில் பிரீதியுடையாரும், மூவுலகத்திலும் ஒப்பற்றபராக்கிரமத்தை யுடையவருமாகி பிரசித்தராயிருந்தார், அவர்ஏகாதசிவிரதமாகிய மஹாதபஸை அநுஷ்டிக்குங்காலத்தில் அந்த ஆச்சிரமத்திற்கு துர்வாஸமுனிவர் எழுந்தருள அவரைக்கண்டவுடனே அம்பரீஷன் எழுந்திருந்து, தண்டம்சமர்ப்பித்து, அர்க்கியம் பாத்தியம் முதலிய உபசாரங்களைச் சமர்ப்பித்து பக்தியுடன் விண்ணப்பம் செய்தார். துர்வாஸமுனிவரே ! தேவரீருக்கு இந்ததுவாதசியில் ஆதித்தியத்தைச்செய்கிறேன் நதிக்குச்சென்று நீராடிஎழுந்தருளவேண்டும், துவாதசியைக்கழித்துப்பாரணை செய்வதில் தோஷம்விதிக்கப்படுகிறது, ஆகையால் துவாதசியானது கழிவதற்குமுன்பே பாரணைக்கு எழுந்தருளவேண்டுமென்று பிரார்த்திக்க, துர்வாஸமுனிவர், ராஜரிஷியே, உனக்கு விரதபங்கத்தையான் செய்யஇல்லை. இதோகங்கையில் நீராடிச்சீக்கிரமாக வருகிறேன் என்றுசொல்லி மகாயோகியாகிய அந்த துர்வாஸமுனிவர் கங்கையில் நீராடுவதற்கு எழுந்தருளினர். இந்தராஜர்ஷியாகிய அம்பரீஷனுக்கு விரதபங்கத்தைச் செய்யக்கருதி விளம்பமாக ஸ்நாநத்தையும், மாத்தியாந்நிகத்தையும் செய்தார். சீக்கிரமாக எழுந்தருளஇல்லை துவாதசீ விரதத்தில் மிகுந்தசிரத்தை யுடையவராகிய அம்பரீஷன் அதிதியாகிய துர்வாஸர் எழுந்தருளாமையாலும் துவாதசீகழிந்தால் விரதபங்கமுண்டாகுமாதலாலும், அஞ்சி

బరీషో రాజర్షిర్ద్వాదశీవ్రతతత్పరః । ద్వాదశ్యతిక్రమం ప్రేక్ష్య తులసీతీర్థ
మాదదే । దుర్వాసా అపి నైస్నాత్వా శనైర్వ్రతవిఘాతకః। అంబరీషస్య
రాజర్షేర్భార్యయా గృహముత్తమం । నిజాగమనమేవైనం ప్రతీక్షంతం
ముహుర్ముహుః । అవలోక్య స రాజానం మునిరాహరుషాన్వితః ॥ దుర్వా
సాః ॥ మయ్యభుక్తే కథం తావద్భవతా పారణం కృతం । రాజర్షిస్త్వంహి
విఖ్యాతో ద్వాదశీవ్రతనిష్ఠితః ॥ అంబరీషః ॥ న కృతం పారణం తాత స్వీకృ
తం తులసీయుతం । పాదతీర్థం భగవతో దృష్ట్వా ద్వాదశ్యతిక్రమం ॥ దు
ర్వాసాః। హంతాహం వైతతో జ్ఞాత్వా ప్రోక్తవాన్ పారణం కృతం । భవ
తేతహ్యధో గచ్ఛేద్యోతిథిం పరిభావయేత్ । ఇత్యుక్త్వా క్రోధతామ్రాక్షో
రాజానం మునిసత్తమః। క్షత్రబంధో గృహాణేతి శాపార్థం జలమాదదే।ఏ
వం క్రోధసమావిష్టం దుర్వాససమనిష్టదం।విలోక్య రాజాభీతో థ స విష్ణుం
శరణం యయౌ । తతోంబరీషస్య విలోక్య విష్ణుర్భక్తార్తిహంతా భగవా

---

ஸங்கடஸமயத்தில் ஜலபாரணை செய்யலாம்என்று சாஸ்திரத்தில்
சொல்லியவிதியை அநுஸரித்து, எம்பெருமானுடைய துளசீதீர்த்த
த்தைப் பாநம்செய்தனர், துவாதசிவிரதத்தை விகாதம்செய்கிறவரா
ன அந்ததுர்வாஸமுனிவரும் கங்கையில்நீராடி மெதுவாகவந்துஅம்
பரீஷனுடைய கிருகத்தைஅடைந்து தன்வரவையே எதிர்பார்த்துக்
கொண்டிருக்கிற அம்பரீஷனைப்பார்த்து மஹாகோபத்துடன் பின்வ
ருமாறு சொன்னார். ராஜரிஷியே அதிதியாகியயான் புசிக்காமலிருக்
கநீஎப்படிபாரணம் செய்தாய், ராஜரிஷிஎன்றும் துவாதசீவிரதத்தில்
நிஷ்டையுடையவனென்றும்பிரசித்தனாயிருக்கிறாயே. நீஎப்படிபுஜிக்க
லாம், என்றுசொல்ல, அம்பரீஷனும் சுவாமி! அடியேன் பாரணம்
செய்யஇல்லை துவாதசீ அதிக்கிரமிப்பதைக்கண்டு துளஸீமிச்சிரமா
னஎம்பெருமானுடைய ஸ்ரீ பாததீர்த்தத்தைஸ்வீகரித்தேன். என்
றுவிண்ணப்பம் செய்கையில், அம்பரீஷனே, நீபாரணை செய்ததை
யான் அறிந்துக்கொண்டுசொன்னேன், இவ்வளவு அறியாதவனாக எ
ன்னை நினைத்தாயா ஆ, ஆ, எவன் அதிதியைப்புசிப்பிக்காமல் முந்திபு
சித்து அவனை அவமதிசெய்கிறானோ அவன் அதோகதியைஅடை
வான். என்றுசொல்லி, துர்வாஸமுனிவர் கோபத்தினால் கண்கள்
சிவந்து அம்பரீஷனைநோக்கி, அடா; க்ஷத்திரியாதமா, எனது சாப
த்தைப்பிடிஎன்று சொல்லி சபிப்பதற்காகக்கையில் ஜலத்தை எடுத்
தார்; இப்படிமஹாகோபத்துடன் தனக்கு அநர்த்தத்தை யுண்டாக்க
உத்யோகிக்கிற துர்வாஸரைக்கண்டு, நடுநடுங்கி, அம்பரீஷமகாரா
ஜன், ஸ்ரீ விஷ்ணுவைச்சரணம் அடைந்தான். ஆச்சிதருடைய ஸகல
விபத்துக்களையும் ஒழித்து ரக்ஷிப்பவனும் அடியார்களை ரக்ஷிப்பதற்
காக ஓரிடத்தி லிருந்து முடியாதென்று எங்கும் வியாபித்திருப்ப

న్విపత్తిం । తదాస్వదాసస్యకృతామువాచ దుర్వాససాకుపితేనాశు చక్రం ॥ శ్రీభగవాన్ ॥ త్రాహ్యంబరీషంమునినాభిభూతందుర్వాససం సాధుసుదర్శనత్వం। సదాసముల్లంఘితవామమార్గం యతోహిభక్తామమ వైప్రాణభూతాః ॥ ఇత్యేవముక్తఃకిలహేతిరాజః రాజర్షివర్యస్యవిపత్తినుత్త్యై। యత్రాంబరీషోభగవత్ప్రియోభూత్తత్రాభవద్దోషవిలోపితాత్మః ॥ తద్వైసహస్రారమరిఘ్ననేమి స్వతేజసాగ్రస్తసమస్తతేజః । నిరీక్ష్యవైయోగివరస్తదానీంభీతఃప్రదుద్రావదిశోదశాపి । యతోయతో గచ్ఛతిభీతభీతోమునిస్తదానీంహరిభక్తవిప్రియః । తతస్తతోగచ్ఛతివిష్ణుచక్రంభస్మీకర్తుంచండకోపాత్తమాశు।తదాపరిక్రమ్యసశంభులోకంవిధాతృలోకంచతథేంద్రలోకం । త్రాణార్థమున్మత్తగతిర్మహర్షిస్సవిహ్వలః

---

வனும், அதற்கேற்றவைகளான ஞானம, பலம், ஐசுவரியம், முதலான ஆறு மஹாகுணங்களையுடையவனுமானஸ்ரீமந்நாராயணன் கோபிஷ்டரான துர்வாஸமுனிவரால்தம்பக்தனுன அம்பரீஷனுக்கு வந்திருக்கிற விபத்தைக்கண்டு சீக்கிரமாக தம்துதிவ்விய சக்கிராயுததிற்கு ஆஜ்ஞாபித்தார் ! சுதர்சநா; துர்வாஸமுனிவரால் விபத்தை அடைந்திருக்கிறவரும், நிந்திக்கத்தக்கவழிகளை எப்பொழுதும விட்டவரும் நம்பக்தருமாகிய அம்பரீஷனை ரக்ஷியும்,என்பக்தர்கள் எனக்கு பிராணபூதர்களன்றே. என்றுஸர்வேசுவரன் நியமிக்க, ஆயுதராஜனுகிய ஸ்ரீ சுதர்சனுழ்வானும், கடுஞ்சினத்தினுல் கண்கள்கலங்கிச்சிவந்து, ராஜரிஷிசிரேஷ்ட்டனுகிய அம்பரீஷன் இருக்குமிடத்திற்கு அவரது ஆபத்தை ஒழிப்பதற்காகஎழுந்தருளினுர், தேவபாகரே சத்துருக்களை அழிப்பதானநேமியென்னும் வட்டையைப்பெற்று ஆயிரம் அரங்களோடு கூடித்தனது மகாதேஜஸினுல் சூரியன் முதலிய ஸகல தேஜஸையும் விழுங்கிக்கொண்டு மஹாஜ்வாலைகளுடன் வருகிற சக்கிராயுதத்தைக் கண்டவுடனே துர்வாஸமுனிவர் மிகவும்பயந்துபத்துத்திக்குகளிலும் ஓடினுர். ஸ்ரீ விஷ்ணுபக்தனுக்கு விரோதியானதுர்வாஸர்எங்கெந்த இடங்களில் பயந்து ஓடுகிருரோ அந்தந்தஇடங்களில் ஸ்ரீ விஷ்ணுசக்கிரமானது மஹாகோபத்தினுல் அவரைப்பஸ்மமாக எரிப்பதற்கு ஓடிற்று. அப்பொழுது துர்வாஸர் ஸ்ரீ விஷ்ணுசக்கிரத்தினுல் துரத்தப்பட்டுத் தாம்சிவாம் சத்தினுலவதரித்த வாகையால் ஆதியில்சிவலோகத்தையும், அவர்கைவிட பின்பு பிரம்மலோகத்தையும், அவர்கதவை அடைத்திட இதனுலும் அறிந்துக்கொள்ளாமல் இந்திரலோகத்தைச்செலல இந்திரனும் மறைந்துவிட இவ்விதமாக வேதன்னை ரக்ஷித்துக்கொள்ளுவதற்காக ஓடிச்சென்று எவ்விடத்திலும் ரக்ஷணத்தைப்பெருமல் ஒருக்காலத்தில் ரக்ஷிப்பார்களோவென்கிற ஆசையினுல் பிச்சேறினவராகி அவ்விடங்களுக்குப் பின்

క్షీరపయోధిమాప । దదర్శ తస్మిన్ భుజగేంద్రతల్పే శయానమార్తార్తి
హరం పయోధౌ । శరణ్యమేకం శరణాగతానాం మధుద్విషం భక్తియుతో
మునీంద్రః । పపాత భూమౌ శరణాగతస్స తస్యాగ్రతో భక్తజనప్రియస్య ।
త్రాహీతి వాచం సకృదుచ్చరన్వై మునీశ్వరో విహ్వలమానసస్సః । అవే
క్ష్యతం భక్తజనార్తిహంతా మునీంద్రమేనం శరణాగతం సః । స్వభక్తవిద్వే
షిణమూర్తచిత్తం కించిత్ స్మరన్విష్ణురువాచ జిష్ణుః ॥ శ్రీభగవాన్ ॥ ఆగః
కృతం యద్ధి బభూవ మోహాత్ భక్తస్య మే భక్తజనప్రియస్య । నాలం హి త
త్ క్షంతుమహం మునీంద్ర మత్తోధికా భక్తజనా యదద్య । తదంబరీషం
శరణం భజస్వ మద్దాసవర్యం శరణాగతానాం । అభీష్టదం నూనమనేన
ముక్తస్సుదర్శనేనాప్యనుగచ్ఛతాశు । ఉక్త్వైవముత్ఫుల్లసరోజనేత్రో దు
ర్వాససం వీతసమస్తధైర్యం । అంతర్దధే ప్రాంజలిమంజనాభస్సభోగి

---

னும் சென்று பயனைப் பெறாமல் சுவாமியினுடைய சக்கிராயுதத்திற்
குப்பதில்செய்யச்சக்தியற்று நிற்கிற இந்ததேவதைகளை ஆச்சிரயித்
துப்பயனில்லை என்று நிச்சயித்துக்கொண்டு மிகவும் வியாகுலராகி,
திருப்பாற்கடலிற்சென்று, அந்தக்ஷீரஸமுத்திரத்தில சேஷசயனத்
தில யோகநித்திரையைச் செய்தருளுகிறவனும், ஆச்சிரிதர்களுடைய
சகலதுக்கங்களையும் ஹரிப்பவனும், சரணமடைந்தவர்களைச் சகலவி
தத்திலும் ரக்ஷிக்கவல்லவனும், தனக்கு ஒப்பாரும், மிக்காருமில்
லாதவனுமாகிய ஸ்ரீமதுசூதனனைப்பக்தியுடன் சேவித்துச்சரணமடை
ந்து பக்தஜநப்பிரியனாகிய அவனதுசன்னிதானத்தில் சுவாமி! அடி
யேனை ரக்ஷிக்கவேண்டுமென்று ஒருதரம்சொல்லிமனத்தில் வியாகு
லத்துடன் பூமியில்விழுந்தார். ஆச்சிரிதருடைய ஆர்த்தியை ஒழிப்ப
வரான ஸ்ரீ பகவான் சரணமடைந்திருக்கிற துர்வாஸமுனிவரைக்க
டாக்ஷித்து அவன் ஆதியில் தம்முடையபக்தனுக்கு த்வேஷியாகி
அதனால் வருந்துவதைச் சற்றுமனதில் சிந்தித்து ஜயசீலரான ஸர்
வேசுவரன் அருளிச்செய்தார், துர்வாஸமுனியே! பக்தஜநப்பிரிய
னாகிய என்னுடையபக்தனான அம்பரீஷன் விஷயத்தில் நீ அபராதியா
னாயன்றோ, அந்தஅபராதமானது என்னால் சகிக்கமுடியாது, பக்தர்
கள்செய்த அபராதத்தைக்ஷமிப்பதில் என்னிலும் என்பக்தர்களேமி
குந்தசக்தியுடையவர்கள். எனக்கு அவ்வளவுசக்தியில்லை, ஆதலால்
எனதுதாஸர்களுக்குள் உத்தமனாகியும், சரணமடைந்தவர்களுக்குச்
சகலஅபீஷ்டத்தையும்தருகிறவனாகியுமிருக்கிற அந்தஅம்பரீஷனையே
நீசரணமாகப்பற்று, அப்பொழுது இந்தசக்கிராயுதமானது உன்னை
க்கொல்லாமல் விடுமென்று புண்டரீகாக்ஷனான முராரியானவர் தமக்
கெதிரில்கைகளைக்குவித்துக்கொண்டுதைரியமில்லாமல் நடுங்கிநிற்கிற

తల్పేనసమంమురారిః ॥ సంప్రాపితోదైన్యమసౌమునీంద్రశ్చక్రేణతేనాప్రతిమప్రభేన । తదంబరీషంశరణంజగామ భక్త్యాయుతఃకైటభవైరిభక్తం। సరాజవర్యశ్శరణాగతంతంనిరీక్ష్యవిష్ణోరపిచక్రహేతిం । ననామతస్మిన్సమయేసమృద్ధంప్రబుద్ధదైత్యాంతకమానతాత్మా । నమోస్తుతేహేతివరాప్రమేయప్రభావతుభ్యంజితశత్రుచక్ర । నమస్సహస్రారనమోనమస్తేత్రాహ్యేనమార్తంశరణాగతంత్వాం । క్షమస్వయత్కర్మకృతంతదానీంమాంప్రత్యనన్యంమునినాస్వమోహాత్ । మత్ప్రార్థనాంభక్తజనప్రియత్వంగృహ్ణీష్వముక్తంచతమాతనుష్వ । ఇత్యుక్త్వాప్రణతోభూమావనుత్థితోభూన్నృపోత్తమః । క్షాంతమిత్యేవచక్రేణచోక్తమార్తస్తదానఘ । మహర్షిరపిముక్తోభూచ్చక్రంచాపియథాగతం। పూజితంహ్యంబరీ

---

துர்வாஸமுனிவருக்கு அருளிச்செய்து ஸ்ரீசேஷசயனத்துடன் அந்தர்ப்பவித்தார். பின்பு துர்வாஸமுனிவர் மஹாதீனதசையைப் பெற்று நிகரற்ற தேஜஸையுடையதான ஸ்ரீ சக்கிராயுதந்து ரத்தப்பரமபாகவதரான அம்பரீஷனைச் சரணமடைந்தார். அப்பொழுது அம்பரீஷன் தன்னைச் சரணமடைந்த துர்வாஸமுனிவரையும், அவரைஎரிக்கவருகிற எம்பெருமானுடைய திவ்யசக்கிராயுதத்தையும் கண்டு, அசுரர்களுடைய குலத்தைநீருக்கவல்லதான அந்தச்சுதர்சனத்தைவணங்கி தண்டம் சமர்ப்பித்து ஸ்துதிக்கிறான். ஆயுதராஜரே, அளவிடக்கூடாதமகிமையைப்பெற்றவரே, சத்துருக்களின் கூட்டத்தை ஜயிப்பவரே, உமக்குத்தண்டம் சமர்ப்பிக்கிறேன். ஆயிரம் அரங்களைப் பெற்றதிருவாழியே, உமக்குத்தண்டம் சமர்ப்பிக்கிறேன். ஆர்த்தியை அடைந்துஉம்மைச் சரணமடைந்திருக்கிற இந்தத்துர்வாஸரை ரக்ஷிக்கவேண்டுகிறேன். சுவாமி ! உமதுதாஸனாகிய அடியேன்விஷயத்தில் அப்பொழுது மோஹத்தினால் இவர்செய்த அபாராதத்தை க்ஷமித்தருளவேண்டும், பக்தஜனப்பிரியரான தேவரீர் அடியேனுடைய பிரார்த்தனையை அங்கீகரித்து இந்த துர்வாஸரைக்கொல்லாமல் விட்டுரக்ஷிக்கவேண்டுமென்று பிரார்த்தித்து பூமியில் சாஷ்டாங்கமாகத் தண்டம் சமர்ப்பித்து எழுந்திருக்கஇல்லை, அப்பொழுது க்ஷமித்தேன்என்று ஸ்ரீ சுதர்சனாழ்வான் அருளிச்செய்ய ஆர்த்தரான துர்வாஸரும் துக்கத்தினின்றும் விடுபட்டார்.மஹாபராக்கிரமத்தைப்பெற்றவரான திருவாழியாழ்வான் அம்பரீஷமஹாராஜனால் ஆராதிக்கப்பட்டு எம்பெருமானை அடைந்தார்.

షేణజగామలఘువిక్రమం । ఏతత్తేసర్వమాఖ్యాతంయన్మాంత్వంపరిపృచ్ఛసి। విష్ణుభక్తాపరాధంవైకృత్వాయత్ప్రాప్నుయాన్నరః ॥

ఇతిశ్రీమార్కండేయపురాణే క్షేత్రకాండే వీక్షారణ్యమాహాత్మ్యే
అంబరీషవిషయేదుర్వాసస్కృతాపరాధ కథనంనామ
అష్టోత్తరశతతమోధ్యాయః.

నవమాధ్యాయప్రారంభః.

శ్లో॥ దేవభాగః ॥ అధ్యాత్మంజ్ఞాతుమిచ్ఛామి మునీంద్రవిగతస్పృహః। పుత్రమిత్రకళత్రాదౌతస్మైబ్రూహికృపానిధే ॥ శాలిహోత్రః ॥ అహంతేకథయిష్యామిశృణుష్వాధ్యాత్మముత్తమం । యత్ జ్ఞాత్వామునయస్సర్వేపరాంగతిమవాప్నుయుః । ఆత్మానమధికృత్యైతత్ప్రవృత్తంమునిసత్తమ ॥ శ్రుతంహిసంప్రదాయేనమునిభిస్తత్వదర్శిభిః ।

---

தேவபாகரே, விஷ்ணுபக்தனுக்கு அபராதம் செய்தவன் எதை அடைவான் என்று நீர்கேட்டபடி இதைஎல்லாம் உமக்குச் சொன்னேனென்று ஸ்ரீ சாலிஹோத்திரமுனிவர் அருளிச்செய்தார்.

ஸ்ரீ மார்க்கண்டேய புராணத்தில் க்ஷேத்திரகாண்டத்தில் வீக்ஷாரண்ணிய மாஹாத்மியத்தில் அம்பரீஷன்விஷயமாக துர்வாஸர் செய்த அபராதத்தைச் சொல்லுகிற நூற்றெட்டாவது அத்தியாயம் முடிந்தது.

## ஒன்பதாவது அத்தியாயம்.

தேவபாகமுனிவர் ஸ்ரீ சாலிஹோத்திரரைவணங்கி, சுவாமி கருணாநிதியே,முநீந்திரரே புத்திரமித்திரகளத்திராதிகளிடத்தில் ஆசையற்றவனை அடியேன் ஆத்மவிஷயமான ஜ்ஞானத்தைப் பெறுவதற்கு இச்சிக்கிறேன் அதை அருளிச்செய்யவேண்டுமென்றுபிரார்திக்க, சாலிஹோத்திரர் அருளிச்செய்தார் தேவபாகரே ! எதைஅறிந்துமுனிவர்கள் பரமகதியை அடைவார்களோ அந்தஆத்மஜ்ஞானத்தைஉமக்குச்சொல்லு கிறேன். ஆத்மஸ்வருபத்தை நிச்சயிப்பதற்காக உண்டான தாகிய இந்தசாஸ்திரமானது தத்துவதர்சிகளான முனிவர்களாலஉபதேசபரம்பரையாய்க் கேட்கப்பட்டதன்றோ. நீரும் அதை அப்படி உபதேசவழியால் அறியவேண்டும். ஆத்மாவானவன் அதிக

ఆత్మాతినిర్మలః ప్రోక్తో జ్ఞానానందగుణో హి సః। తస్య జ్ఞానం తు సంక్షిప్తం కర్మణావిద్యయా ద్విజ । విద్యయా స్వస్వరూపస్య ప్రాప్తిర్భవతి శాశ్వతీ । విద్యా జ్ఞానమవిద్యా స్యాదజ్ఞానం జ్ఞానినాం వర। అజ్ఞానేనావృతో జంతుర్జ్ఞానేన హి విముచ్యతే। అవిద్యయా తిరోధానమనాదిరితి నశ్రుతం। సా బ్రహ్మజ్ఞానతో నశ్యేదవిద్యాచ్ఛాదనాత్మికా । ప్రకృతిర్యా తు సా మాయా మాయీ తు భగవాన్హరిః । మాయయా మోహితో జీవో న జానాతి హి కించన । అతస్తు దేహే రాజేంద్ర కరోత్యాత్మమతిం నరః । పుత్రమిత్రకళత్రేషు మమతాం చ కరోతి వై। అతో నరకమాప్నోతి పుమాన్మూఢతయా తయా। అసుర్యా నామ తే లోకా అంధేన తమసావృతాః । ప్రేత్య తానభిగచ్ఛంతి

---

நிர்மலவஸ்துவாகவும், ஜ்ஞாநாநந்தஸ்வரூபனாகவும், ஜ்ஞாநாநந்தகுணனாகவும், சாஸ்திரங்களால்ச் சொல்லப்பட்டான், ஜ்ஞானஸ்வரூபியான அவனது தர்மபூதஜ்ஞானமானது அநாதியாய் அநுஸரித்து வருகிறதாகிய கருமமென்னும் அவித்தியையினால் விகாஸமில்லாமல் சுருங்கியிருக்கிறது. வித்தியையினால் சாசுவதமான தன் ஸ்வரூபத்தைப் பெறுகிறான். அதாவது தன்ஸ்வரூபத்தை அறிந்துத்தன் அதிகாரத்திற்குஈடாகபக்தி பிரபத்திகளாகிய வித்தியைகளில் ஒன்றைப்பற்றி அதனால் வருகிறபகவானது அநுக்கிரஹத்தினாலே அவித்தியையையொழித்து சாசுவதமானதன்ஸ்வரூபத்தைப்பெறுகிறான்.

ஞானிகளில் சிறந்தவரே வித்தியை என்பது ஜ்ஞானம், அவித்தியையென்பது அஜ்ஞானம், அஜ்ஞானத்தினால் மறைக்கப்பட்ட ஸ்வரூபத்தையுடையவன் ஜ்ஞானத்தினால் முக்தியை அடைகிறான். அதாவது, பக்தியினால், அல்லது பிரபத்தியினால் முக்தியை அடைகிறான். இந்த அவித்தியையினால் ஆத்மாவுக்குவருகிறமறைவானது அநாதிஎன்று குருமுகத்தினால் நமக்குக்கேள்வி, அப்படிப்பட்டஸ்வரூபத்தை மறைப்பதாகிய இந்தஅவித்தியையானது பிர்ம்ம ஜ்ஞானத்தினால் அதாவது பக்திபிரபத்திகளால் நசிக்கிறது. ஸத்துவம், ரஜஸ், தமஸ்என்னும் முக்குணவடிவாகிய மூலபிரகிருதியே மாயை என்னப்படும் பகவானான ஸ்ரீஹரியே மாயாவீ ஆகிறார். பகவானது மாயையான பிரகிருதியினால் மோஹத்தை அடைந்த ஜீவன் ஒன்றையும் அறிகிறதில்லை அதனால்நான் ஸ்தூலன், நான்கிழவன், நான்கறுத்தவன் என்றிவ்விதமாகச் சரீரகுணங்களை ஆத்மாவில் ஏறிட்டுச் சரீரத்தில் தானே ஆத்மபுத்தியைச்செய்கிறான். ஸகலத்திற்கும் ஸ்வாமியான ஸ்ரீ மந்நாராயணனுக்கே சேஷபூதங்களாகி இருக்கிறபுத்திர மித்திர களத்திராதிகளிடத்தில் எனது என்னும்ஸம்பந்தத்தை ஏறிட்டுக்கொள்ளுகிறான். இப்படிசரீரம்வேறு ஆத்மாவேறு என்று விவேகித்து அறியாதமூடனாகி அஹங்காரமமகாரங்களைப் பெற்றிருக்கையால் ஜீவன் நரகத்தை அடைகிறான். ஆத்மஸ்வரூபத்தை உணராதமூடர்கள்

యేనాధ్యాత్మవిదో జనాః । మోహేన కురుతే కామం పుణ్యపాపాత్మకం నరః । తస్మాద్వినశ్యతశ్శీఘ్రం పుణ్యపాపే ఉభే అపి । భిన్నో దేహేంద్రియాదిభ్యో నిత్యోణు వ్యాపకో నరః । అవినాశీ కథం నామ వినాశితుభ వేద్వపుః । అస్వతంత్రః కథం నామ స్వతంత్రో వై భవిష్యతి । స్వతంత్రః పరమాత్మా వై క్షేత్రజ్ఞః పారతంత్ర్యగః । అతోస్య పారతంత్ర్యం వై స్వభావో గదితో మయా । స్వాతంత్ర్యం భగవన్నిష్ఠం యస్తం వేద స వేదవిత్ । ఈశ్వరస్సర్వభూతానాం హృదయే తిష్ఠతి ప్రభుః । సర్వభూతాంశ్చ విక్షేపైర్భ్రామయన్ భవయంత్రితాన్ । అహంకారం తథా దర్పం కామం క్రోధం చ మత్సరం । దంభలోభౌ మదం చైవ తాన్ముక్త్వా ముచ్యతే జనః । అభయం సర్వభూతానాం ద

---

இறந்தார்களாகில் பேரிருள்சூழ்ந்ததாகிய அசுர்யங்கள் என்னும்உலகங்களை அடைகின்றனர். புருஷன் மோஹத்தினல் புண்ணியபாபரூபங்களான கருமங்களைச்செய்கிருன். அந்தஇருவினைகளும் பிர்ம்மஜ்ஞானத்தினல் அதாவது பக்திபிரபத்திகளில் ஒன்ருல் விரைவில்நசிக்கின்றன. ஆத்மாவானவன் தேஹம், இந்திரியங்கள், மனம், பிராணன், புத்தி, இவைகளைக்காட்டிலும் வேறுபட்டவனுய் உத்பத்தி இல்லாதவனுய், காலத்திரயத்திலும் இருப்பவனுய், அணுவாய், ஜ்ஞானத்தினல் எங்கும்வியாபித்திருக்கிறவனுய், அழிவில்லாதவனுயிருக்கிருன். அவன் அப்படி இருக்க நசித்துப் போகிறசரீரமானது நசிக்காதவனுன ஆத்மாவாக எப்படியாகும், அதுபோலவேஸ்வாதந்திரியமில்லாதவனுனஜீவன் எப்படிஸ்வதந்திரனுவான். பரமாத்மாவேஸ்வதந்திரன், இந்த்ச்சரீராபிமானியான ஜீவன் தனது கருமத்திற்கு ஈடாக அவனளித்தசரீரத்தைச்சுமந்துகொண்டு எல்லாத்தொழில்களிலும் அந்தப்பரமாத்மாவுக்கு பராதீநனுக இருக்கிருன். ஆகையால் ஜீவனுக்கு என்றும் பராதீநதசையேஸ்வபாவமானது என்று என்ஞல் சொல்லப்பட்டது. ஸர்வஸ்வாமியாகிய எம்பெருமானிடத்திலிருக்கிறஸ்வாதந்திரியத்தையும்,ஜீவனிடத்திலிருக்கிறபராதீநதசையையும் எவன் அறிகிருனே அவன் ஸகலவேதங்களின் பொருளையும் அறிந்தவனுகிருன். தேவபாகரே! ஸகலபூதங்களுடையவும் ஹிருதயஸ்தாநத்தில் ஸகலவல்லமையையுடைய பிரபுவாகியும், ஸகலத்தையும் தனக்குச்சரீரமாக உடையவனுகியுமிருக்கிற ஈசுவரன் கருமவசத்தினல் ஸம்ஸாரசக்கிரத்திலேறி யிருக்கிறஸகல பிராணிகளையும் அவரவரது கருமத்திற்குத் தகுந்தபடியே ஏவிக்கொண்டுஸகலகருமங்களுக்கும் ஸாக்ஷியாக இருக்கிருன். ஆகையால் அவனே ஸ்வதந்திரன். அஹங்காரம், செருக்கு, காமம், குரோதம், மத்ஸரம், டம்பம், லோபம், மதம், ஆகிய துர்க்குணங்களை ஒழித்துப்புருஷன் முக்தியை அடைகிருன். ஸகலபூதங்களுக்கும் அபயத்தைக்கொடுத்துஸகலபூதங்களிடத்திலும் கருணையோடுகூடினவனுகிஸகல

త్వాకరుణయాన్వితః । భగవన్న్యస్తచిత్తోయోముచ్యతేసనరస్సుధీః। ని
యమ్యమనసోవృత్తింవిషయేభ్యోతిధీరధీః । కేవలాత్మనినిక్షిప్తమనాఃకై
వల్యమాప్నుయాత్ ।యోమూకఃపరనిందాయాంపరదారేషునిస్పృహః।
యుక్తశ్చబ్రహ్మవిద్యాయాంనరోనిర్వాణమృచ్ఛతి । వాసుదేవపరోమ
ర్త్యోమృత్యుంతీర్త్వాప్రసన్నధీః । జ్ఞానేనహ్యమృతంయాతినకదాచిద్విన
శ్యతి। బ్రహ్మజ్ఞానంయదాజ్ఞాతమస్యజంతోరనన్యగం।తదైవప్రాప్నుయా
దేషతద్బ్రహ్మాచ్యుతసంజ్ఞితం । తదేవభోగిశయనేవీక్షారణ్యేచదృశ్యతే।
ఈర్ష్యాసూయాదినిర్ముక్తోనారాయణపరాయణః । నరోనమృత్యు
మాప్నోతినాన్యభక్తిఃకదాచన ॥ పరాశరవ్యాసశుకాదిభిర్యత్సత్వోద్రి
క్తైరుచ్యతేబ్రహ్మసంజ్ఞం।తదేవసర్వస్యనిదానభూతంతద్విష్ణ్వాఖ్యంశ్రూ

---

மும் எம்பெருமானுடைய ஸ்வரூபமென்று அறிந்து எம்பெருமானிடத்தில் சலிக்காமல் வைத்தமனத்தையுடைய மஹாபுருஷன் முக்தியை அடைகிருன் மனதைவிஷயங்களில் நின்றும் இழுத்துப்பொறிவழி செலுத்தாமல் அடக்கினவனுகிப் பிரகிருதிஸம்பந்த மற்றமையினுல் பரிசுத்தமாயிருக்கிற கேவலாத்மாவாகிய தன்ஸ்வரூபத்தில் ரமிக்கிற மனதையுடையவன் கைவல்லியத்தை அடைவான். எவன் அயலாரை நிந்திப்பதில் ஊமையோ எவன் அயல்மாதரிடத்தில் ஆசையற்றவனே. எவன்பிர்ம்மவித்தியையில் தெளிந்தவனே. அந்தப்புருஷன் முக்தியை அடைகிருன், ஸ்ரீ வாசுதேவனைப் பரகதியாகப்பெற்று உபாஸிக்கிற புருஷன் மிருத்தியுவென்னும் ஸம்ஸாரபந்தத்தை ஒழித்து ஞானத்தினுல் முக்தியை அடைகிருன் அவன்ஒருக்காலத்திலும், பரமபுருஷார்த்ததிற்கு யோக்கியனுகாதபடி நசிக்கிறதில்லை. ஸம்ஸாரத்தில்உழல்கிற இந்தச்சேதநனுக்குஎப்பொழுதுபிர்ம்மஜ்ஞானம் உண்டாகிறதோ அப்பொழுது,அச்சுதனென்னும்பெயர் பெற்றதான அந்தப்பரபிர்ம்மத்தையே அடைகிருன்.எது,பக்தனை ஒருக்காலத்திலும் ஒருவிதத்தினுலும் கைவிடாமல் ரக்ஷிக்கிறதோ, பிர்ம்மம் என்கிறபதத்திற்குஎது முக்கியமான பொருளோ அதை எப்படி காணப்போகிறோமென்று அலையவேண்டாம். அந்தப்பரபிர்ம்மமே வீக்ஷாரண்ணிய க்ஷேத்திரத்தில் ஸ்ரீ சேஷசயநத்தில் ஸர்வசுலபமாகக்காணப்படுகிறது. தேவபாகரே ! ஈர்ஷ்யை, அசூயை, முதலிய துர்க்குணங்களில்லாதவனும், ஸ்ரீ மந்நாராயணனையே பரகதியாகஉபாசிப்பவனும், மற்றொருதேவதையை உபாசிக்காதவனுமாகியபுருஷன் ஒருக்காலத்திலும்மிருததியுவென்னும்ஸம்ஸாரத்தை அடைகிறதில்லை. ஸத்துவகுணத்தையே முக்கியமாகப் பெற்றவர்களானஸ்ரீ பராசரர், வியாஸர்,சுகர், முதலான மஹாரிஷிகளால் எந்தவஸ்துவானது பிரம்மமென்றும், ஜகத்காரணவஸ்துவென்றும், விஷ்ணுவென்கிறபெயரையுடையதென்றும் சொல்லப்பட்டதோ எது அவ்வித

యతే విప్రవర్య ॥ ధ్యాత్వా దేవం పుండరీకాయతాక్షం వీక్షారణ్యే భోగితల్పే శయానం । ప్రాదుర్భూతం భక్తవాత్సల్యయోగాత్ విష్ణుం సాక్షాత్ భక్తిగమ్యం భజస్వ। సర్వేషు వేదేషు పురాణవాక్యేష్వయం హరిః శంభుశివాదిశబ్దైః । సామాన్యభూతైర్విశేషభూతఉద్గీయదేతత్తదర్థానుగుణ్యాత్ ॥ సనకాదియోగిజనహృత్సరోరుహే నివసంతమచ్యుతముదస్తసంసృతం। భజ భక్తిభావితమనాస్త్వమున్నతస్త్యజ దేవతాంతరపరేషు సౌహృదం ॥

ఇతి శ్రీమార్కండేయపురాణే క్షేత్రకాండే వీక్షారణ్యమాహాత్మ్యే
అధ్యాత్మకథనం నామ నవోత్తర శతతమోఽధ్యాయః॥

---

மாகச் சுருதியிலும் சொல்லப்படுகிறதோ அந்தப்பரமாத்மாவான புண்டரீகாக்ஷனே ஸ்ரீவீக்ஷாரண்ணியக்ஷேத்திரத்தில் பக்தவாத்ஸல்யத்தினால்ஸ்ரீவீரராகவனாக ஆவிர்ப்பவித்து,சேஷசயநத்தில்யோகநித்திரைசெய்கிறானென்று அறிந்து பக்தியினால் அடையத்தக்கவனாகிய அந்த எம்பெருமானை அடையும்,தேவபாகரே!ஸகலமான வேதவாக்கியங்களிலும்,புராணவாக்கியங்களிலும் ஸாமாந்ய சப்தங்களோடும் விசேஷசப்தங்களோடுங்கூடி யிருக்கிற காரணவாக்கியங்களில் ஆகாசமத்தியத்தில் சம்புவானவர் தியானிக்கத்தக்கவர் என்றும், சிவன் மாத்திரமே இருந்தார் என்றும், ஆகாசத்தினின்றும் ஸகல பூதங்களுமுண்டாகின்றன வென்றும், இவ்விதமாகச்சொல்லுகிற சிலவிடங்களில் சம்புசிவாதிகளாகிய ஸாமாந்யசப்தங்களுக்குப் பொருள்யாதெனில் பிரமனுமில்லை, ஈசாநனுமில்லை, மற்றும் ஒன்றுமில்லையென்று எடுத்துச்சொல்லி ஸ்ரீ மந்நாராயணன் ஒருவனே பிரளயகாலத்திலிருந்தானென்று அறுதியிடுகிற விசேஷசப்தத்தினாலே சுருதியில் முன்சொல்லிய சம்புசிவாதி பதங்களுக்கு ஸ்ரீமந்நாராயணனே பொருளாகச் சொல்லப்படுகிறான் ஆகையால் தேவபாகரே ! நீர், ஸநகாதிகளான யோகிகளுடைய ஹிருதயகமலத்தில் வீற்றிருக்கிறவனும், ஆச்சிரிதரைஒருக்காலத்திலும் நழுவவிடாதவனும் ஆச்சிருதரக்ஷணத்தினின்றும் தான் நழுவாதவனும், அதனால் அச்சுதனென்று பிரசித்தனுமாக இருப்பவனும் ஸகலதுஷ்கர்மங்களையும் ஒழிப்பவனுமாகிய ஸ்ரீ மந்நாராயணனைப் பக்தியுடன் உபாசியும், மற்றுமொருதேவதைகளை உபாசிப்பவர்களிடத்தில் ஸ்நேஹத்தைவிடுமென்று ஸ்ரீசாலிஹோத்திர முனிவர் அருளிச்செய்தார்.

ஸ்ரீமார்க்கண்டேய புராணத்தில் க்ஷேத்திரகாண்டத்தில் வீக்ஷாரண்ணிய மாஹாத்மியத்தில் ஆத்மஸ்வரூபத்தை நிரூபணம்செய்வதாகிய நூற்றொன்பதாவது அத்தியாயம் முடிந்தது.

దశమాధ్యాయప్రారంభః.

శ్లో॥ దేవభాగః ॥ యేయాంతిపరమంధామయోగినోధ్వస్తకిల్బిషాః । తంయోగంశ్రోతుమిచ్ఛామిత్వత్తోహంమునిపుంగవ ॥ శ్రీశాలిహోత్రః ॥ శృణుయోగంపరంగుహ్యంగుహ్యానాంచపవిత్రకం । పరమంబ్రహ్మవిషయంసనకాదిభిరీరితం । యమశ్చనియమశ్చైవఆసనంచతథైవచ । ప్రాణాయామస్తథాప్రత్యాహారోవైధారణాతతః । ధ్యానంచైవసమాధిశ్చేత్యష్టాంగోయోగఉచ్యతే॥

## பத்தாவது அத்தியாயம்.

தேவபாகர் ஸ்ரீசாலிஹோத்திரமுனிவரைவணங்கி சுவாமீ யோகிகள் எதைச்செய்து ஸகலபாபங்களையும் ஒழித்துப் பரமபதத்தைப் பெறுகிறார்களோ அந்தயோகத்தைத் தேவரீரிடத்தினின்றும் கேட்க இச்சிக்கிறேனென்று விண்ணப்பம்செய்ய ஸ்ரீ சாலிஹோத்திரர் பின்வருமாறு அருளிச்செய்தார். தேவபாகரே! பரமரஹஸ்யங்களிலும் ரஹஸ்யமாகி சிஷ்யகுணபரிபூர்ணரான ஸத்தானசிஷ்யனுக்கு உபதேசிக்கத்தக்கதும், மஹாபரிசுத்தமானதும், ஸர்வோத்தமமுமாய் ஸநகாதிகளாலே உபதேசிக்கப்பட்டதுமான பிர்ம்மவிஷயமான யோகத்தைச்சொல்லுகிறேன் கேளும் இயமம், நியமம், ஆஸநா, பிராணாயாமம், பிரத்தியாஹாரம், தாரணை, தியாநம், ஸமாதிஎன்று எட்டு அங்கங்களையுடையதாக யோகம்சொல்லப்படுகிறது இந்தஅங்கங்களில் யம நியமங்களைப்பற்றி "శ్రీయోగయాజ్ఞవల్క్యే ప్రథమాధ్యాయే ॥ అహింసాసత్యమస్తేయంబ్రహ్మచర్యందయార్జవం। క్షమాధృతిర్మితాహారశ్శౌచంచేతియమాదశ ॥ కర్మణామనసావాచాసర్వభూతేషుసర్వదా । అక్లేశజననంప్రోక్తమహింసాత్వేనయోగిభిః। విధ్యుక్తంచేదహింసాస్యాత్ క్లేశజన్మైవజంతుషు। సత్యంభూతహితంప్రోక్తంనయథార్థాభిభాషణం । కర్మణామనసావాచాపరద్రవ్యేషునిస్పృహా। అస్తేయమితిసాప్రోక్తాఋషిభిస్తత్త్వదర్శిభిః । కర్మణామనసావాచాసర్వావస్థాసుసర్వదా । సర్వత్రమైథునత్యాగంబ్రహ్మచర్యంప్రచక్షతే । బ్రహ్మచర్యాశ్రమస్థానాంయతీనాంనైష్ఠికస్యచ। బ్రహ్మచర్యంచతత్ప్రోక్తంతథైవారణ్యవాసినాం । ఋతావృతౌస్వదారేషుసంగతిర్యావిధానతః । బ్రహ్మచర్యంతుసైవోక్తాగృహస్థాశ్రమవాసినాం। రాజ్ఞశ్చైవగృహస్థస్యబ్రహ్మచర్యంప్రకీర్తితం।విశాంవ్రతవతాంచైవకేచిదిచ్ఛంతిపం

డితాః। శుశ్రూషైవ తు శూద్రస్య బ్రహ్మచర్యం ప్రకీర్తితం। శుశ్రూషా వా గురోర్నిత్యం బ్రహ్మచర్యముదాహృతం। గురవః పంచ సర్వేషాం చతుర్ణాం శ్రుతిచోదితాః। మాతా పితా తథాచార్యో మాతులశ్శ్వశురస్తథా। ఏషాం ముఖ్యాస్త్రయః ప్రోక్తా ఆచార్యః పితరౌ తథా। ఏషాం ముఖ్యతమస్త్వేక ఆచార్యః పరమార్గవిత్। తమేవం బ్రహ్మవిచ్ఛ్రేష్ఠం నిత్యకర్మపరాయణం। శుశ్రూషయార్చయేన్నిత్యం శిష్యస్తుష్యేద్యథా గురుః। దయా చ సర్వభూతేషు సర్వత్రానుగ్రహస్స్మృతః। విహితేషు తదన్యేషు మనోవాక్కాయకర్మణాం। ప్రవృత్తౌ వా నివృత్తౌ వా ఏకరూపత్వమార్జవం। ప్రియాప్రియేషు సర్వత్ర సమత్వం యచ్ఛరీరిణాం। క్షమా సైవేతి విద్వద్భిర్గదితా ధర్మవేదిభిః। అర్థహానౌ చ బంధూనాం వియోగేష్వపి సంపదాం। భయప్రాప్తౌ చ సర్వత్ర చిత్తస్య స్థాపనం ధృతిః। అష్టౌ గ్రాసా మునేర్భక్ష్యాః షోడశారణ్యవాసినాం। ద్వాత్రింశత్తు గృహస్థస్య యథేష్టం బ్రహ్మచారిణాం। ఏషామయం మితాహారస్త్వన్యేషామల్పభోజనమితి॥ (హఠప్రదీపికాయాం మితాహారవిషయః) ఘృష్టం సుమధురం స్నిగ్ధం స్వచ్ఛం ధాతుప్రపోషణం। మనోభిలషితం యోగ్యం కాలయోభోజనం చరేత్। అన్నేన కుక్షేర్ద్వౌ భాగౌ తోయేనైకం ప్రపూరయేత్। వాయోస్సంచరణార్థాయ చతుర్థమవశేషయేత్॥ కట్వామ్లతిక్తలవణోష్ణహరీతశాకసౌవీరతైలతిలసర్షపమద్యమత్స్యాః। ఆజాదిమాంసదధితక్రకులుత్థకోలపిణ్యాకహింగులశునాద్యమపథ్యమాహుః॥ భోజనమహితం విద్యాత్పునరప్యుష్ణీకృతం రూక్షం। అతిలవణమమ్లసమేతం తీక్ష్ణం శాకోత్కటం దుష్టం॥ గోధూమశాలియవషాష్టికశోభనాన్నం క్షీరాజ్యఖండనవనీతసితామధూని। శుంఠీపటోలకఫలత్రయపంచశాకముద్గాదిదివ్యముదకం చ యతీంద్రపథ్యమితి॥ (శ్రీయోగయాజ్ఞవల్క్యే) శౌచం తు ద్వివిధం ప్రోక్తం బాహ్యమాభ్యంతరం తథా। మృజ్జలాభ్యాం స్మృతం బాహ్యం మనశ్శుద్ధిస్తథాంతరం। మనశ్శుద్ధిస్తథా జ్ఞేయా ధర్మేణాధ్యాత్మవిద్యయా। ఆత్మవిద్యా చ ధర్మశ్చ పిత్రాచార్యేణ వానఘ। తస్మాత్సర్వేషు కాలేషు సర్వైర్నిశ్శ్రేయసార్థిభిః। గురవశ్శ్రితసంపన్నాస్తోష్యా వాఙ్మానసాదిభిః॥ ద్వితీయాధ్యాయే॥ తపస్సంతోష ఆస్తిక్యం దానమీశ్వరపూజనం। సిద్ధాంతశ్రవణం చైవ హ్రీర్మతిశ్చ జపో వ్రతం। ఏతే తు నియమాః ప్రోక్తాస్తాన్ సర్వాంశ్చ పృథక్ శృణు। విధినోక్తేన మార్గేణ కృచ్ఛ్రచాంద్రాయణాదిభిః। శ

రీరశోషణంప్రాహుస్తాపసాస్తపఉత్తమం । యదృచ్ఛాలాభతోనిత్యమలంపుంసోభవేదితి । యాధీస్తామృషయఃప్రాహుస్సంతోషంసుఖలక్షణం । ధర్మాధర్మేషువిశ్వాసోయస్తదాస్తిక్యముచ్యతే । న్యాయార్జితంధనంధాన్యమన్యద్వాయత్ప్రయచ్ఛతి । అర్థిభ్యఃశ్రద్ధయాయుక్తోదానమేతదుదాహృతం । యత్ప్రసన్నస్స్వభావేనవిష్ణుంవారుద్రమేవవా । యథాశక్త్యర్చనంభక్త్యాపతదీశ్వరపూజనం। రాగాద్యపేతంహృదయంవాగదుష్టానృతాదినా।హింసాదిరహితఃకాయపతదీశ్వరపూజనం ॥ సిద్ధాంతశ్రవణంప్రోక్తంవేదాంతశ్రవణంబుధైః । ద్విజవత్ క్షత్రియస్యోక్తంసిద్ధాంతశ్రవణంబుధైః । వేదలౌకికమార్గేషుకుత్సితంకర్మయద్భవేత్। తస్మిన్భవతియాలజ్జాహ్రీస్తుసైవేతికీర్తితా । విహితేషుతుసర్వేషుశ్రద్ధాయాసామతిర్భవేత్ । గురుణాచోపదిష్టశ్చవేదబాహ్యవివర్జితః। విధినోక్తేనమార్గేణమంత్రాభ్యాసోజపస్మృతః । అధీతవేదసూత్రేవాపురాణేసేతిహాసకే।ఏతేష్వభ్యసనంయచ్చసచాభ్యాసోజపస్మృతః।జపశ్చద్వివిధఃప్రోక్తోవాచికోమానసస్తథా।వాచికోపాంశురుచ్చైశ్చద్వివిధఃపరికీర్తితః । మానసోమననధ్యానభేదాద్ద్వైవిధ్యమాశ్రితః । ఉచ్చైర్జపాదుపాంశుశ్చసహస్రగుణఉచ్యతే । మానసస్తుతథోపాంశోస్సహస్రగుణఉచ్యతే। మననాచ్చతథాధ్యానంసహస్రగుణముచ్యతే। ఉచ్చైర్జపస్తుసర్వేషాంయథోక్తఫలదోభవేత్। నీచైశ్శ్రుతోనచేత్సోపిశ్రుతశ్చేన్నిష్ఫలోభవేత్। ఋషిచ్ఛందోధిదైవానాంధ్యానంమంత్రస్యసర్వదా।యస్మిన్మంత్రజపేరాగీసఏవహిఫలప్రదః।ప్రసన్నగురుణాపూర్వముపదిష్టస్త్వనుజ్ఞయా । ధర్మార్థమాత్మసిద్ధ్యర్థముపాయగ్రహణంవ్రతం॥ ఇతి॥ శ్రీయోగపాద్మేబ్రహ్మాణంప్రతిశ్రీభగవానువాచ। తృతీయాధ్యాయే।అంగుష్ఠాదిస్వావయవస్ఫురణాదర్శనైరపి। అరిష్టైర్జీవితస్యాపిజానీయాత్క్షయమాత్మనః। జ్ఞాత్వాయతేతకైవల్యప్రాప్తయేయోగవిత్తమః॥ చతుర్థాధ్యాయే॥ పాదాంగుష్ఠేకరాంగుష్ఠేస్ఫురణంయస్యనశ్యతి। తస్యసంవత్సరాదూర్ధ్వంజీవితస్యక్షయోభవేత్ । మణిబంధేతథాగుల్ఫేస్ఫురణంయస్యనశ్యతి । షణ్మాసావధిరేతస్యజీవితస్యక్షయోభవేత్। కూర్పరేస్ఫురణంనోచేత్తస్యత్రైమాసికీస్థితిః।కక్షేమేహనపార్శ్వేచస్ఫురణానుపలంభనే। మాసావధిజీవితంస్యాత్తదర్ధంస్వేదదర్శనే।

అశ్రుతేజాఠరేఘోషే దినానిదశజీవతి । జ్యోతిఃఖద్యోతవద్యస్యతద ర్ధాంతస్యజీవితం । జిహ్వాగ్రదర్శనే నేత్రీణిదినాన్యవధిరాత్మనః । జ్వాలాగ్రదర్శనే మృత్యుర్ద్విదినే ననసంశయః। ఏవమాదీన్యరిష్టానిదృష్ట్వాయుఃక్షయకారణం । నిశ్శ్రేయసాయయుంజీతజపధ్యానపరాయణఇతి॥"

யோகயாஜ்ஞவல்க்கியத்தில் முதல்அத்தியாயத்தில் கார்க்கிதேவிக்கு யார்ஜ்ஞவல்க்கியர் உபதேசிக்கிறார் கார்க்கியே!கேள். இயமமென்னும் அங்கமானது அஹிம்ஸை,ஸத்தியம்,அஸ்தேயம்,பிர்ம்மசர்யம்,தயை, ஆர்ஜவம், க்ஷமை,திருதி, மிதாஹாரம், செளசம் எனப்பத்துவித மாகும்.இவைகளில் (அஹிம்ஸைஎன்பது) ஹிம்ஸைசெய்யாமையா ம்,அதாவது ஸகலபிராணிகள்விஷயத்திலும்என்றும்மனோவாக்காயங் களின் தொழிலால் நோகச்செய்யாமையாம்,யஜ்ஞவிதியில் பிராணிக ளைநோகச்செய்வது வேதத்தினல் விதிக்கப்பட்டிருப்பதால் ஹிம் ஸையாகாதென்று யோகிகளால் சொல்லப்பட்டது. (ஸத்தியமென் பது) ஸகலபிராணிகளுக்கும் ஹிதத்தைச்செய்வதான உண்மைமொ ழியாம். அன்றிபிராணிகளுக்குத் தீமைசெய்கிற உண்மைமொழிகள் ஸத்தியமாகமாட்டா. (அஸ்தேயமென்பது) மனோவாக்காயங்களால் அயலார்பொருளில் ஆசையற்றிருக்கையா மென்று தத்துவஜ்ஞானிக ளான முனிவர்கள் கூறியிருக்கின்றனர். (பிரும்மசரியமென்பது.) எத் தேசத்திலும் எக்காலத்திலும் எவ்விதபருவங்களிலும் எவ்வகையின ரானஸ்த்ரீகளையும் புணராமையாம். இது பிரும்ம சரியவிரதம்பூ ண்டவனுக்கும், நைஷ்டிகபிரும்ம சாரிக்கும், யதிகளுக்கும், வாநபிர ஸ்தனுக்கும் அநுஷ்டிக்கத்தக்கதாம், கிருஹஸ்தாச்சிரமத்தோர்க்கு சாஸ்திரவிதியினல் ருதுகாலங்கள் தோறும் தனதுதருமபத்தினி யைப்புணருவதே பிரும்மசரியமாம். இதுகிருஹஸ்தாச்சிரமத்தைப் பெற்ற க்ஷத்திரியனுக்குமுளது விரதத்தை அநுஷ்டிக்கிறவைசியரு க்கும் பிரும்மசரியமுளதென்று சிலபண்டிதர்கள் அபிப்பிராயப்படு கின்றனர். உயர்ந்தவர்ணத்தோர்க்கு சிசுருஷைசெய் வதேசூத்திரன து பிரும்மசர்யமாகும்.தத்தம் குருவுக்குநித்தியமும் சிசுருஷைசெய் வதும் பிரும்மசரியமாம். நான்குவர்ணத்தோர்க்கும் ஐந்துகுருக்கள் வேதத்தில் சொல்லப்பட்டார்கள். அவர்கள்மாதா, பிதா, ஆசாரியன், அம்மான், மாமனர்என்றிவர்களே. இவர்களில்மாதா, பிதா, ஆசாரி யன்ஆகிய மூவரேசிரந்தவர். இவர்களிலும், பரமார்த்தபூதமான பிரு ம்மத்தை அறிந்திருக்கிற ஆசாரியன் ஒருவனேமிகவும் சிரேஷ்டன். அப்படிபிரும்மஜ்ஞானியாகியும், நித்தியகருமங்களை அநுஷ்டித்துக் காட்டி உலகத்தாரைநல்வழியில் நிலைநிறுத்துகிறவருமான ஆசாரிய னைச்சிஷ்யனனவன் அடிபணிந்து அவருக்கக்கும்படி சிசுருஷைகளைச் செய்யக்கடவன், (தயைஎன்பது) ஸகலபிராணிகளிடத்திலும் எக்கா லத்திலும் அநுக்கிரஹித்தலாம். (ஆர்ஜவமாவது) சாஸ்திரவிதிகளை அநுஸரித்துச் செய்கையிலும், சாஸ்திரவிலக்குகளை அநுஸரித்துச்

செய்யாமல்விடுகையிலும், மனோவாக்காய கருமங்களில் எக்காலத்திலும் ஒருவிதமாக இருக்கையாம். (க்ஷமையாவது) இஷ்டங்கள் வரினும், அநிஷ்டங்கள்வரினும், ஸமபுத்தியாயிருக்கையாமென்று தருமத்தை அறிந்தபண்டிதர்கள் சொல்லியிருக்கின்றனர். (த்ருதியாவது) அர்த்தஹாநிவந்தாலும்; இஷ்டபந்துக்கள் மரித்தாலும், ஸகலஸம்பத்துக்களும ஒழிந்தாலும் மற்றும் சிலபயநிமித்தங்கள் ஸம்பவித்தாலும், ஒருவிதவிகாரமு மின்றியே மனதைநிலைநிறுத்துவதாம். (மிதாஹாரமாவது) முனிவருக்கு எட்டுகபளங்கள். வாநபிரஸ்தனுக்குப்பதினறு கபளங்கள். கிருஹஸ்தனுக்கு முப்பத்திரண்டு கபளங்கள். பிரும்மசாரிக்கு அவனிஷ்டத்தளவான கபளங்கள்என்று நான்கு ஆச்சிரமத்தோர்க்கும் மிதாஹாரமானது விதிக்கப்பட்டிருக்கிறது. இந்த ஆஹாரத்திலும் அல்பமாகப்புசிக்கையானது 'யோகாப்பியாஸிக்கு மிதாஹாரமாம்.

(ஹடபிரதீபிகைஎன்னும் கிரந்தத்தில்) யோகாப்பியாஸியான புருஷன், நல்லஸம்ஸ்காரங்களைப் பெற்றதாய், மதுரமாய், நெய்ஸம்பந்தமுடையதாய், தாதுவிருத்தியைச்செய்வதாய், மனத்திற்கினிதாய், தோஷமற்றதாய் யோகியானதனக்கு ஏற்றதாயிருக்கிற ஆஹாரத்தை இரண்டு வேளையில் புசிக்கக்கடவன். தனது வயிற்றிலிரண்டு பாகங்களை அன்னத்தினலும், ஒருபாகத்தை ஜலத்தினலும் நிறைத்து மற்றொருபாகத்தைவாயு ஸஞ்சாரத்திற்காக விடவேண்டும், காரம், புளிப்பு, கைப்பு, உப்பு, சுடுகை, இவைகளோடுகூடிய அன்னம், கீரை, காடி, எண்ணெ, எள், கடுகு, கள், சாராயம், மத்ஸியம், செம்மறியாடு, வெள்ளாடு, இவைகளின் மாம்ஸம், தயிர், மோர், கொள்ளு, இலந்தை, பிண்ணாக்கு, பெருங்காயம், வெள்ளைப்பூண்டு, ஆகிய இவைமுதலியவைகள், யோகிக்குத்தகாதவைகளென்றும், மறுபடி சுடவைத்ததும், நெய்ஸம்பந்த மின்றியே இருப்பதும், அதிகமானஉப்பு, புளிப்பு, கைப்பு, காரம் இவைகளோடு கூடியதும், அதிகமாகக்கீரையுடன் சேர்ந்ததும், கிரிமி, மயிர், எச்சில் இவைகளின் ஸம்பந்தத்தினலும், மற்றும சிலவிதங்களினலும் தோஷத்தை அடைந்ததுமாகிய அன்னமும் யோகிக்கு ஹிதமாகாதென்று அறியவேண்டும், கோதுமை, சம்பாநெல், யவதான்னியம, அறுபதுநாட்களில் விளைகிற சம்பாநெல், இவைகளின் அன்னமும், பால், நெய், கர்க்கண்டு, வெண்ணெ, சர்க்கரை, தேன், இவைகளும் சுக்கு, படல்; கடுக்காய், நெல்லிக்காய், தானிக்காய், ஐவகைக்கீரை, பயர், முதலியவை மழைஜலம், இவைகளும், யோகாப்பியாஸிக்குபத்தியமாகுமென்று ஆத்மாராமயோகீசுவரர்கூறினர் (யாஜ்ஞவல்க்கியத்தில் சௌசமென்பது) பாஹியமென்றும், ஆந்தரமென்று இருவகையாம், அவைகளில்மண்ஜலம். இவைகளால் செய்கிற சுத்தியானது பாஹியமாம், மனத்தின்சுத்தியானது ஆந்தரமாம், இந்தச்சுத்தியானது தருமத்தினலும், ஆத்மஞானத்தினலும் உண்டாகும். அந்தத்தருமமும் ஆத்மஜ்ஞானமும், தந்தையினல் அல்லது ஆசாரியனல் கிடைத்தனவாகில் களங்கமற்றவையாகும், ஆதலால் பிரும்மஜ்ஞானிகளான

ஆசாரியர்களை முக்தியை விரும்பியசிஷ்யர்கள்மனோவாக்காய கருமங்களாலும் மற்றும் ஸகலவிதத்தினாலும் ஆராதிக்கவேண்டும். (இரண்டாவது அத்தியாயத்தில்)கார்க்கியே ! நியமம்என்னும் அங்கமானது. தபஸ், ஸந்தோஷம், ஆஸ்திக்யம், தானம், ஈச்வரபூஜநம், ஸித்தாந்தசிரவணம், ஹிரீ, மதி, ஜபம், விரதம், எனப்பத்துவகையாம். அவைகளைப்பிரித்துக்கேட்பாயாக. (தபஸ்ஸாவது) சாஸ்திரவிதியினால் செய்யப்பட்ட கிருச்சிரம், சாந்திராயணம், முதலியவைகளால் சரீரத்தை உலர்த்துவதாமென்றும் இதுஉத்தமதபஸ்என்றும் ரிஷிகள்சொன்னார்கள் (ஸந்தோஷமாவது) தனதுபிரயத்தினமின்றியே கிடைத்த பொருளால் திருப்திஅடைந்து இதுஅமையுமென்று புருஷனுக்கு உண்டாகிற புத்தியாமென்றும் இதுமிகுந்தசுகஸ்வரூபமென்றும் ரிஷிகள்சொல்லியிருக்கின்றனர். (ஆஸ்திக்யமாவது) சாஸ்திரத்தில் சொல்லியபடியே தருமாதருமங்களில் உண்டாகிறநம்பிக்கையாம், (தானமாவது) நீதியினால் சம்பாதித்ததனம் தான்னியம், மற்றும், வஸ்துக்கள் இவைகளில் எதையாகிலும் யாசிப்பவர்க்கு சிரத்தையுடன் கொடுப்பதாம். (ஈசுவரபூஜனமாவது) நிர்ம்மலமான ஸ்வபாவத்தையுடையவனாகித்தன் சக்திகுத்த குந்தபடியே பக்தியுடன் விஷ்ணுவையாகிலும், உருத்திரனையாகிலும். பூஜித்தலாம், காமம்முதலிய தோஷங்களற்றமனமும், பொய், கடினச்சொற்கள். முதலியதோஷங்களற்றவாக்கும், தனதுதொழிலால் ஒருவனையும் வருந்தச்செய்யாத சரீரமும் இம்மூன்றும் ஒருவனுக்குக்கூடினவாகில் அதுவேபகவானுடைய பூஜையாம், ※ இம்மூன்றில் ஒவ்வொன்றிருந்தாலும் அதுவே ஸ்ரீ கேசவனுடைய திருவாராதனமாமென்றும் ஸ்ரீ சௌநகபகவான் அருளிச்செய்தார் ※ (ஸித்தாந்தசிரவணமாவது) பெரியோர்களிடத்தில்வேதாந்தத்தின்தத்துவார்த்தங்களைக்கேட்பதாம், இதுபிராம்மணனுக்குப்போலவேக்ஷத்திரியனுக்கும் சொல்லப்பட்டது. (ஹிரீஎன்பது) வேதமார்க்கங்களிலும், லௌகிகமார்க்கங்களிலும், எந்தத்தொழில் பழிக்கப்பட்டதோ அதைச்செய்வதில் தனக்கு உண்டாகிறலஜ்ஜையாம். (மதிஎன்பது) சாஸ்திரங்களால் விதிக்கப்பட்டகருமங்களைச் செய்வதில் சிரத்தையாம் (ஜபமென்பது) குருவினாலுபதேசிக்கப்பட்டதும், வேதபாஹியமாகாததும், அதற்குரியவிதியை அநுஸரித்துமிருக்கிறமந்திராப்பியாஸமாம், அதுபோலவேதான் ஓதியவேதத்தில் அல்லதுபிரும்மசூத்திரத்தில் அல்லது இதிஹாஸத்தோடு கூடினபுராணங்களில் ஒருபாகத்தை அப்பியசித்தலும் ஜபமென்னப்படும், ஜபமானது வாசிகமென்றும், மானஸிகமென்று மிருவகையாம், அவைகளில் வாயினால் மந்திரத்தைச்சொல்லி ஜபித்தல் வாசிகஜபமாம், இந்தவாசிகஜபமானது,உச்சைர்ஜபமென்றும்,உபாம்சு ஜபமென்றும் இருவகைப்படும்.உச்சைர்ஜபமாவது உறத்துச்சொல்லுவதாம், உபாம்சுஜபமாவது. ரஹஸ்யமாகச்சொல்லுவதாம். அவைகளில் உச்சைஜபத்தினும், உபாம்சுஜபமானது ஆயிரம் மடங்கு அதிகமானபலனைத் தருவதாம், மனத்தினால்மந்திரத்தை ஜபித்தலாகிய மான

